
Parle-G
விளையாட்டில் ஸ்டம்ப் தகர்ந்தால் என்ன? விளையாட்டின் உண்மையான சக்தி
பார்லே-ஜீ
சுவை மிகுந்தது, சக்தி நிறைந்தது.
everest/93/PP/173-tm

**மீண்டும் வந்துவிட்டது...** **உங்களுடைய செல்ல மகளுக்கு.**



# ராஜ் லக்ஷ்மி

## யூனிட் ப்ளான்

*அவளுடைய வளமான எதிர்காலத்திற்கு*




### சிறப்பம்சங்கள்:

- காலவரையறையற்ற ப்ளான்.
- குறைந்தபட்ச முதலீடு ரூ. 1500 மற்றும் அதற்குமேல் ரூ. 500-ன் மடங்கில். உச்ச வரம்பு கிடையாது.
- தனிநபர், மாநில, மத்திய அரசு, ட்ரஸ்ட், சங்கம், கார்ப்பொரேட் பாடி — 5 வயது வரையுள்ள பெண் குழந்தைக்காக முதலீடு செய்யலாம்.
- குழந்தை பிறந்ததும் செய்யும் ரூ. 1500 முதலீடு 20 ஆண்டுகளில் ரூ. 21,000 ஆகலாம். வளர்ச்சி நிலை ப்ளானில் சேர்ந்திடும் வயதைப் பொறுத்திருக்கும்.
- விண்ணப்பம் ஏற்றுக்கொள்ளப் பட்ட தேதியிலிருந்து முதிர்வுறும் தேதி கணக்கிடப்படும்.
- ஒவ்வொரு காலவரையிலும் அறிவிக்கப்படும் போனஸ் முதிர்வடைந்ததும் வழங்கப்படும்.

எல்லா மியூசுவல் ஃபண்டுகள் மற்றும் செக்யூரிட்டிகளில் செய்யும் முதலீடுகளும் மார்க்கெட் ரிஸ்கிற்கு உட்பட்டவைகளாகும். மற்றும் செக்யூரிட்டிகள் மார்க்கெட்டை பாதிக்கும் அம்சங்கள் மற்றும் ஆட்சித்திறம் பொறுத்து திட்டங்களின் NAV ஏறிடவும் இறங்கிடவும் செய்யும். ராஜ் லக்ஷ்மி என்பது திட்டத்தின் பெயர் மட்டுமே மற்றும் திட்டத்தின் தரத்தையோ, அதன் எதிர்கால வளர்ச்சியையோ அல்லது வருமானத்தையோ எவ்விதத்திலும் சுட்டிக்காட்டுவது ஆகாது. தயவுசெய்து முதலீடு செய்யுமுன் ஆஃபர் பத்திரத்தைப் படிக்கவும்.




**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**

*மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101*

*கிளை அலுவலகங்கள்: • கோயம்புத்தூர். போன்: 214973 • சென்னை. போன்: 517101, 517190 • மதுரை. போன்: 38186 • திருச்சி. போன்: 27060*

UTI-59/94 TM E

கமல்ஹாசன்

நடிக்கும்



சந்தமாமா விஜயா

கம்பைன்ஸ்



# நம்மவர்



B. வெங்கட்ராம ரெட்டி

சேதுமாதவன்

இதோ "தெம்பூட்டும் ஊட்டச்சத்து" மிக்ஸ்.












*விரையுங்கள்.*

ஊட்டச்சத்து மிக்க பழங்கள் மற்றும் பதாம்
உள்ளடங்கிய புத்துணர்ச்சியூட்டும்
"போனிமிக்ஸ்" பாலோடு கலந்து அருந்துங்கள்.
விரைவில் அருந்துங்கள், சக்தியால் இது
உயரப்பறந்து விடுவதற்குமுன்.

**Bonny Mix**

உன்னதமான சக்தியூட்டும் மிக்ஸ்

Avenues:HF:51:94




# அம்புலிமாமா

நிறுவனர் : 'சக்கரபாணி'   நிர்வாக ஆசிரியர் : நாகிரெட்டி

## சரியான சீர்திருத்தங்கள்

கல்வி முறையையும் கற்பிக்கும் விதத்தையும் மாற்றியமைக்க் முயற்சிகள் நடப்பதாக இப்போது செய்திகளைப் படிக்கிறோம். ஆரம்ப பள்ளிகளில் குழந்தைகளைச் சேர்க்க நேர்முகத் தேர்வு நடத்துவதைத் தவிர்க்கவும் அரசாங்க யோசனையின் பேரில் பள்ளிகள் முடிவு செய்துள்ளன. சுமை புத்தகங்களும் நோட்டுகளும் இனிக் குழந்தைகள் சுமக்க வேண்டாம். பாடப் புத்தகங்களின் எண்ணிக்கைகளும் குறைந்து விடும். 'வீட்டு வேலை' கொடுப்பது குறைந்து மாணவர்களுக்குப் படிக்க அதிக நேரம் கிடைக்கும். இவை எல்லாம் சரியான சீர்திருத்தங்களே. இவற்றால் மாணவர்களும் பெற்றோர்களும் மகிழ்ச்சி அடைந்துள்ளார்கள். இவையெல்லாம் எவ்வளவு விரைவில் நடைமுறையில் வரும் என்றே எதிர்பார்க்கிறார்கள்.



வட இந்தியப் பள்ளி ஒன்று பத்து வகுப்புகளுக்கும் அறைகள் கட்டிய பிறகே பள்ளியைத் தொடங்கியது. ஒவ்வொரு வகுப்பிலும் ஒரே பிரிவு. அதில் குறிப்பிட்ட எண்ணிக்கை மாணவர்களே. காலையில் ஆரம்பித்து நண்பகலில் விட்டு இரண்டு மணி நேர இடைவேளைக்குப் பின் மாலை வகுப்புகள். அதிலேயே வீட்டு வேலைகள் செய்து விட வேண்டும். புத்தகங்களையும் நோட்டுகளையும் மாணவர்கள் பள்ளியில் விட்டு பள்ளிக் கூட பஸ்ஸில் அவர்கள் வீடு திரும்புவார்கள்.



இது ஒரு புதுமுறைதானே! நல்ல சீர்திருத்தமும் கூடத்தானே!

மதிமுகம் : 95   அக்டோபர் 1994   புன்னகை : 4

தனிப்பிரதி : ரூ. 4.00   வருட சந்தா : ரூ. 48.00





Estd. 1947

# CHANDAMAMA PUBLICATIONS

## வாசகர்களுக்கு

### அன்பு வேண்டுகோள்

'அம்புலிமாமா'வை வெளியிடப் பயன்படும் நியூஸ் பிரிண்ட் பத்திரிகைக் காகிதத்தின் விலை அண்மையில் மிக மிக உயர்ந்து விட்டது. ஆயினும் நம் பத்திரிகையின் விலையை உயர்த்தாமல் இருக்க வெகுவாகப் பாடுபட்டோம். ஆனால் தற்போதுள்ள விலையில் பத்திரிகையை வெளியிடுவது இயலாது என்ற நிலை உருவாகி இருப்பதால் அடுத்த இதழில் இருந்து 'அம்புலி மாமா'வின் விலையை அதிகரித்தே ஆக வேண்டி உள்ளது.

இதனால் நவம்பர்'94 முதல் அம்புலிமாமா தனிப்பிரதி விலை ரூ.5/- வருட சந்தா ரூ. 60/- என ஆகிறது.

இந்த சந்தர்ப்பத்தில் நல்ல கதைகளுடன் மேலும் வித்தியாசமாக அம்புலிமாமாவை அமைத்து வெளி யிடுவோம் என வாசகர்களுக்கு உறுதி கூறுகிறோம்.

பி. விஸ்வநாத ரெட்டி
(வெளியீட்டாளர்)

செய்திகளும் தகவல்களும்

# அமைதிக்கான மற்றொரு ஒப்பந்தம்



ஜோர்டானிய விமானம் ஆகஸ்ட் 3ல் இஸ்ரேல் மீது எவ்விதத் தடையும் இல்லாமல் பறந்தது என்பது ஆச்சரியப்படத்தக்க செய்தியே. அந்த விமானத்தை ஜோர்டன் மன்னர் ஹுசைன் தாமே ஓட்டிச் சென்றார். இம்மாதிரி இஸ்ரேல் பயணம் செய்ய ஜுலை 25க்கு முன் அவருக்கு அனுமதி இருக்கவில்லை. அந்தத் தேதியில்தான் ஜோர்டன் மன்னர் ஹுசைனும் இஸ்ரேல் பிரதமர் ராபினும் வரலாற்றுச் சிறப்புமிக்க ஒப்பந்தம் ஒன்றில் கையெழுத்திட்டார்கள். இந்த ஒப்பந்தம் வாஷிங்டன் வெள்ளை மாளிகையிலுள்ள ரோஜா தோட்டத்தில் ஏற்பட்டது. அமெரிக்க அதிபர் பில் கிளின்டன் அதனை வாஷிங்டன் பிரகடனம் எனக் கூறி அதில் சாட்சியாகக் கையொப்பமிட்டார்.

ரோஜா தோட்டத்தில் ஏற்பட்ட இரண்டாவது சமாதான ஒப்பந்தம் இது. முதல் ஒப்பந்தம் சென்ற செப்டம்பர் 3ந் தேதி இஸ்ரேல் பிரதமர் ராபினுக்கும் பாலஸ்தீன விடுதலை இயக்கத் தலைவர் யாசர் அராபத்திற்குமிடையே ஏற்பட்டது. இதுவும் பில் கிளின்டனின் முன்னிலையில்தான் நடந்தது.

வாஷிங்டன் பிரகடனத்தின் வாயிலாக 1948லிருந்து ஜோர்டனுக்கும் இஸ்ரேலுக்குமிடையே இருந்த பகைமை மறைந்தது. இதற்குச் சான்று ஜோர்டன் மன்னரின் விமானம் இஸ்ரேலில் டெல் அவிவ், ஜெருசலம் ஆகிய பகுதிகளில் சுற்றி வந்ததாகும். ஒப்பந்தம் ஏற்பட்ட பின் இப்பகுதியில் பறந்த முதல் ஜோர்டன் விமானம் இது. இந்நிகழ்ச்சியும் வரலாற்றுச் சிறப்புமிக்கதே.

இந்த ஒப்பந்தம் ஏற்பட்டது எப்படி எனக் காண வரலாற்று ஏடுகளை நாம் சற்றுப் புரட்டிப் பார்ப்போம். ஜோர்டன் நதிப் பகுதி சாரமும் வளமும் மிக்கதால் கி.மு. 4000 லிருந்தே மக்கள் அங்கு வந்து வசிக்கலாயினர். கி.மு. 64ல் தற்போதைய ஜோர்டன் ரோமன் சாம்ராஜ்யத்தின் ஆதிக்கத்தில் வந்தது. கி.பி. ஏழாவது நூற்றாண்டில் அது அரேபியர் வசமாகியது. 1096-99ல் இப்பகுதியை ஐரோப்பியக் கிருஸ்துவர்கள் கைப்பற்றினார்கள். 16வது நூற்றாண்டில் அது துருக்கியர் வசமாகி 1914-18 முதலாவது உலகப் போர் வரை ஆட்டோமன் டர்க் சாம்ராஜ்யத்தில் இருந்தது.

அராபியர் சுதந்திரம் கோரித் துருக்கியருக்கு எதிராக கிளம்பினார்கள். இப்போராட்டத்தில் பிரிட்டிஷார் அராபியருக்கு உதவினர். அதனால் ட்ரான்ஸ் ஜோர்டன் என்ற நாடு ஏற்பட்டு அதன் பாதுகாப்புப் பொறுப்பு பிரிட்டிஷாரிடம் இருந்து வந்தது. 30 ஆண்டுகளுக்குப் பின் 1946ல் ஜோர்டன் முழு சுதந்திரம் பெற்று ஆங்கில ஆட்சியிலிருந்து விடுதலை பெற்றது. ஹெஸ்மைட் அப்துல்லா 1949ல் மன்னராகி அந்நாட்டிற்கு ஹெஸ்மைட் ஜோர்டன் எனப் பெயரிட்டார். 1953ல் ஹுசைன் இதன் மன்னரான போது அவருக்கு வயது 17. நீண்ட நாட்களாக பதவியிலுள்ள ஒரே அராபிய தலைவர் இவரே.




இஸ்ரேல் நாடு ஏற்பட்டதும் ஜோர்டனுக்கும் இஸ்ரேலுக்குமிடையே மோதல்கள் ஏற்படலாயின. இஸ்ரேல் வசமிருந்த ஜோர்டன் நதியின் மேற்குப் பகுதியை அராபியர் ஆக்கிரமித்தனர். இருபது ஆண்டுகளுக்குப் பின் 1976ல் நடந்த ஆறு நாட்கள் போரில் இஸ்ரேல் அப்பகுதியை மீண்டும் கைப்பற்றியது. 1988ல் ஹுசைன் மன்னர் ஜோர்டன் நதி மேற்குப் பகுதியின் ஆட்சியைப் பாலஸ்தீனியரிடம் ஒப்படைத்தார். பாலஸ்தீன விடுதலை இயக்கம் பாலஸ்தீனத்தைச் சுதந்திர நாடாக அறிவிக்க இது உதவியது.

ஜோர்டனும் இஸ்ரேலும் தமது 40 ஆண்டு பகைமையை மறந்து அமைத்திக்கான ஒப்பந்தம் செய்து வாஷிங்டன் பிரகடனமாக அறிவித்தன. இதன் பின் ஹுசைன் மன்னரின் விமானம் இஸ்ரேல் நாட்டில் பறந்தது இரு நாட்டு மக்களையும் மகிழ்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்தியது. இஸ்ரேல் பிரதமர் மன்னர் ஹுசைனுக்கு அழைப்பு விடுக்க அதை அவர் மகிழ்ச்சியுடன் ஏற்றார். இதனால் அவ்விரு நாடுகளுக்கிடையே இருந்த இரும்புத் திரை விலகியது.




கணபதி சாஸ்திரி ராஜ தர்பாருக்குப் போய் அங்குள்ள பண்டிதர்களை எல்லாம் வாதத்தில் வென்று பல பரிசுகளைப் பெற்றார். அப்போது மன்னன் "பண்டித சிரோமணியே! இந்த நாட்டில் பெரியபுரம் என்ற ஊர் உள்ளது. அங்குள்ளவர்கள் எல்லாத் துறைகளிலும் முன்னேறி இருக்கிறார்கள். அவர்களில் ஒருவர் கூடத் தலைநகருக்கு வந்தது இல்லை. எல்லாப் பிரச்னைகளையும் தமக்குள் பேசியே தீர்த்துக் கொள்கிறார்கள். அந்த ஊரில் ஒரு கோவில் கூடக் கிடையாது. கடவுள் பக்தர்களும் இல்லை. அவர்கள் சுயநலமும் கர்வமும் கொண்டவர்கள் என்று இவற்றால் தெரிகிறது. நீங்கள் அங்கு சென்று அவர்களுக்கு அறிவுரைகள் கூறி அவர்களை நல்வழிப்படுத்த வேண்டும்" என்றான்.

கணபதி சாஸ்திரியும் பெரியபுரத்திற்குச் சென்றார். மன்னன் அனுப்பியதால் அவர் வருகிறார் என்றறிந்து அவ்வூரின் பிரமுகர் வேதாசலம் அவருக்கு மகத்தான வரவேற்பு அளித்து அவர் வசதியாகத் தங்க ஏற்பாடுகளையும் செய்தார்.

கணபதி சாஸ்திரியும் வேதாசலத்திடம் பெருமையாக "என்னிடம் மன்னர் மிகுந்த மரியாதை வைத்திருக்கிறார். உங்களுக்கு அரசாங்கத்திடமிருந்து ஏதாவது உதவி வேண்டுமென்றால் என்னிடம் சொல்லுங்கள். நொடியில் கிடைத்துவிடும்" என்றார்.

வேதாசலமும் "அது இருக்கட்டும். தாங்கள் வந்த வேலையைச் சொல்லுங்கள்" என்றார். எனவே சாஸ்திரியும் "உங்களுக்கெல்லாம் கடவுள் பக்தியின் சிறப்பு பற்றிக் கூற நினைக்கிறேன். அதற்கான கூட்டத்திற்கு ஏற்பாடு செய்யுங்கள்" என்றார்.

-சிவனார் செல்வன்-

வேதாசலம் கூட்டத்திற்கும் ஏற்பாடு செய்ததால் மக்கள் திரளாக கூடினார்கள். கணபதி சாஸ்திரியும் கடவுளின் அருமை பெருமைகளைக் கூறி பலர் கேட்ட சந்தேகங்களுக்கு விளக்கமும் அளித்தார்.

அன்றையக் கூட்டம் முடிந்ததும் ஒரு முதியவர் சாஸ்திரியை அணுகி "அப்பனே! நீ சொற்பொழிவு ஆற்றுகையில் உன்னைக் கவனித்தேன். அடிக்கடி நீ புருவங்களை நெரித்து உதடுகளைக் கடித்துக் கொள்வதைக் கவனித்தேன். இது உனக்குத் தலைநோய் வருவதற்கான அறிகுறி. நீ இந்தத் தைலத்தை நெற்றியில் தடவிக் கொள். தலைவலி வராது" எனக்கூறி ஒரு சிறு குப்பியைக் கொடுத்தார்.

கணபதி சாஸ்திரியும் அதை வாங்கிக் கொண்டு "பெரியவரே! மிக்க நன்றி! உங்களுக்கு அரசாங்கத்திடம் ஏதாவது வேலை ஆக வேண்டுமென்றால் என்னிடம் சொல்லுங்கள். நான் முடித்துக் கொடுக்கிறேன்" என்றார். அந்த முதியவரோ எதுவும் கூறாமல் சிரித்துக் கொண்டே போய் விட்டார்.

அவ்வூரில் ஒரு சிலர் சாஸ்திரியைக் கண்டு தம் கோரிக்கைகளைக் கூறவே அவரும் அரசாங்கத்துடன் தொடர்பு கொண்டு அவற்றைத் தீர்த்து வைப்பதாக வாக்களித்தார்.

இரண்டு நாட்களுக்குப் பின் சாஸ்திரி அவ்வூரின் பெரிய கடை வீதி வழியே போய்க் கொண்டிருக்கையில்



அதே முதியவர் அவரைக் கண்டு "என்னப்பா இது! சுளீரென்று வெயில் அடிக்கிறது. குடையில்லா மல் திரிகிறாயே. ஏற்கனவே உனக் குத் தலைவலி வேறு உள்ளது. இந்தா என் குடையை வாங்கிக் கொள்" என்று கூறித் தன் குடையை அவரிடம் கொடுத்து விட்டுப் போனார்.

ஒருவார காலமாக சாஸ்திரி சொல்லி வந்ததின் பேரில் அவ்வூரார் அங்கு ஒரு கோவில் கட்ட ஒப்புக் கொண்டார்கள். மன்னர் வந்து அதற்கு அடிக்கல் நாட்ட வேண்டும் என்றும் அப்போது சாஸ்திரி சொற் பொழிவு ஆற்ற வேண்டும் என்றும் அவர்கள் வேண்டினார்கள். அதுவும் நடக்கும் என சாஸ்திரி வாக்களித்தார்.

கணபதி சாஸ்திரி தலைநகர் திரும்ப மன்னர் அனுப்பியிருந்த ரதத்தில் ஏறி அமர்ந்தார். அப்போது அதே முதியவர் அவரிடம் "அப் பனே! பயணத்தின்போது நீ சோர்ந்து போனால் இந்த நெல்லிக்காய்களில் ஒன்றை எடுத்து வாயில் அடக்கிக் கொள். உனக்குத் தெம்பு வந்துவிடும். இவற்றைச் சிறப்பு முறையில் தயா ரான தைலத்தில் ஊறவைத்துக் கொண்டு வந்திருக்கிறேன்" என்று கூறி ஒரு சிறு ஜாடியைக் கொடுத் தார்.

சாஸ்திரி அதை வாங்கிக் கொண்டு நன்றி கூறினார். முதியவர் பதிலுக்கு எதுவும் கூறாமல் போய் விட்டது கண்டு ஆச்சரியப்பட்டார். அவர் தம் பக்கம் நின்ற வேதாசலத்





தேவை இல்லை. அவர் இவ்வூரி லேயே மிகச் சிறந்த அறிவாளி. எல்லா சாஸ்திரங்களையும் கற்றவர். வாதத்தில் அவரை யாராலும் செல்ல முடியாது. இந்த ஊராருக்கு அவர் சொல்வதே வேதவாக்கு. அவர் இவ்வூரில் இருப்பதால்தான் எங் களுக்கு எந்தப் பிரச்னையும் எழுவ தில்லை. அவர் சொன்னதால்தான் இதுவரை இந்த ஊரில் கோவிலே கட்டவில்லை" என்றார்.

அதுகேட்டு சாஸ்திரி சற்றுக் கோப மாக "நீங்கள் இவரைப் பற்றி என் னிடம் முன்பே கூறி இருந்தால் இவ ரோடு வாதம் புரிந்து இவரை எளி தில் தோற்கடித்திருப்பேனே. ஆனா லும் இப்போது நீங்களெல்லாம் நான் சொன்னதைக் கேட்டு மனம் மாறி கோவில் கட்ட ஒப்புக் கொண் டீர்களே. இதிலிருந்தே அவர் வாதம் எடுபடாது என்று தெரியவில் லையா?" என்று கேட்டார்.

வேதாசலமோ "இல்லை. நீங்கள் இங்கு வருவது பற்றி அவருக்கு முன்கூட்டியே தெரிவித்தோம். அவர் தான் நீங்கள் எதைச் சொன்னாலும் அதை ஒப்புக் கொள்வதாகச் சொல் லச் சொன்னார்" என்றார். சாஸ்திரி யும் "ஓஹோ! தர்பாரில் எல்லாப் பண்டிதர்களையும் வென்ற என் னோடு வாதம் புரிய முடியாது என்று அவர் எண்ணி பயந்து விட் டார் போலிருக்கிறது" என்றார்.

அதற்கு வேதாசலம் சற்று சிடு

திடம் "இந்த முதியவர் என்னைப் பற்றி நன்கு அறிந்திருக்கிறார் போலும். என்னால் இவருக்கு ஏதோ வேலை ஆக வேண்டி இருக்கும். அதனால்தான் இவர் என்னை அடிக் கடி சந்தித்து ஏதோ ஒன்று கொடுத்து விட்டுப் போகிறார். ஆனால் தனக்கு என்ன வேண்டும் என்பதை இவர் வாய் திறந்து சொல்லவில்லையே. இவருக்கு என்ன வேண் டும் என்று யாராவது கேட்டு என்னிடம் சொன் னால் அதை நான் நிறைவேற்றி வைக்கிறேன்" என்றார்.

வேதாசலமும் "அவர் பெரிய வைத்திய நிபுணர். வைத்தியத்தில் தன் வந்திரியைக் கூட மிஞ்சியவர் அவருக்கு உங்கள் உதவி ஒன்றும்

சிடுப்புடன் "அவர் சிறந்த அறிவாளி மட்டுமல்ல. வைத்திய நிபுணருமாவார். அதனால் அவர் நோயாளிகளுடன் வாதம் புரிய மாட்டார்" என்றார். எனவே சாஸ்திரியும் "அப்படியானால் நான் நோயாளியா?" என்று ஆத்திரப்பட்டுக் கேட்டார்.

வேதாசலமும் "அவர் ஆரம்பத்திலிருந்தே உங்களை நோயாளியாகத்தானே கருதினார். முதலில் தலைவலிக்கு மருந்து கொடுத்தார். வெயிலால் தலை சுற்றுமே என்று குடை கொடுத்தார். இப்போது உடல் தளர்ந்து சோர்வடையுமே என்று நெல்லிக்காய்களைக் கொடுத்தார்" என்றார். அப்போது சாஸ்திரி "சரி நோய்க்கும் வாதத்திற்கும் என்ன சம்பந்தம்?" என்று கேட்டார்.

வேதாசலமும் "இதோ பாருங்கள். ஒரு மன்னன் தன் ஆட்சியிலுள்ள ஒரு ஊரில் எவ்விதப் பிரச்னையும் இல்லை என்றால் அதற்காக மகிழ்ச்சி அடைய வேண்டும். அப்படி மன்னன் சந்தோஷப் படாததால் அவனுக்கு ஏதோ ஒரு நோய் உள்ளது தெரிகிறது. மகாப் பண்டிதரான நீங்கள் இதை அறிந்து அவனுக்கு அறிவுரை கூறாமல் அவன் சொன்னான் என்று இங்கு வந்தீர்களே. அதனால் உங்களுக்கும் ஏதோ நோய் உள்ளது என்பது தெரிந்து விட்டது. ஒருவருக்குத் தேவை இல்லாத விஷயத்தைக் கூறுபவன் ஏதோ ஒரு நோய்க்கு ஆளானவன்தானே" என்



றார்.

அதுகேட்டு சாஸ்திரி கோபம் கொண்டு "அப்படியானால் இந்த ஊரார் ஏன் என் சொற்பொழிவுகளைக் கேட்டார்கள்? ஏன் என் சொற்படி கோவில் கட்டச் சம்மதித்தார்கள்? ஏன் கோரிக்கைகளை வைத்தார்கள்?" என்று பொரிந்து தள்ளினார்.

வேதாசலமும் "நீங்கள் தவறாக எடுத்துக் கொள்ளக் கூடாது. இதுவும் அந்த வைத்திய நிபுணரின் சிகிச்சை முறைகளில் ஒன்று. நீங்கள் மனம் நோகாமலிருக்க வேண்டுமே என்பதற்காக நாங்கள் அவர் சொன்னபடி நடந்தோம். நீங்கள் சொன்னதற்குத் தலை ஆட்டினோம். நீங்கள் எங்களது ஒரு கோரிக்கையை மட்டும்

நிறைவேற்றுங்கள் பார்க்கலாம். இவ்வூரில் கோவில் கட்டினால் அதில் அந்த ஞானியை நிறுத்தி பூஜை செய்ய வேண்டும் என்பதே அது" என்றார்.

அதைக் கேட்டு சாஸ்திரி அமைதியுடன் "அப்படியானால் அவர் கடவுள் நம்பிக்கை இல்லாதவர் என்று தெரிகிறது. கோவில் இல்லை, புராணம் பிரசங்கங்கள் இல்லை. இதெல்லாம் அவர் வேண்டாம் என்றால் அவர் மிகச் சிறந்த அறிவாளியோ?" என்று கேட்டார்.

வேதாசலமோ "கடவுள் பக்தி, தெய்வ சாபம் என்பது பற்றி எல்லாம் அவர் எங்களுக்குக் கூறாது போனாலும் எது மனிதனின் உயர் தர்மம் என்பதை நடத்திக் காட்டுகிறார். பிறரை மதிப்பது, துன்பத்திலுள்ளவர்களுக்கு ஆறுதல் அளித்தல் என்பவை அவர் எங்களுக்கு போதித்தவை. மனிதனுக்குப் பணி புரிவது மகேஸ்வரனுக்கு பணிபுரிவது போலாகும் என்பது அவரது அறிவுரை. இப்படிப்பட்டவரை நீங்கள் கடவுள் நம்பிக்கை இல்லாதவர் என்று கூறினாலும் நாங்கள் கோபம் கொள்ள மாட்டோம்" என்றார்.

அதுகேட்டு கணபதி சாஸ்திரி கல்லாய் சமைந்து போனார். சிறிது நேரம் கழித்து அவர் "இதுவரை நான் என்னைவிடச் சிறந்த அறிவாளியே இல்லை என நினைத்து கர்வம் கொண்டிருந்தேன். இதுவும் மனிதனின் ஒருவகை நோயே. இது இன்னமும் என்னில் குணமடையவில்லை. நான் தலைநகர் போகப் போவதில்லை. இங்கேயே இருந்து அந்த அறிவாளியிடமிருந்து கற்க வேண்டியதைக் கற்பேன்" என்றார்.

கணபதி சாஸ்திரி தம் முடிவை எழுதி மன்னனுக்கு அனுப்பி விட்டுப் பெரியபுரத்திலேயே தங்கி விட்டார். மன்னனுக்கும் தன் தவறு புரிந்தது. இதற்குப் பின் மன்னன் பெரியபுரத்தின் சம்பந்தமாக எவ்விதத் தலையீடும் செய்யவில்லை.






# 5

*(கீர்த்திசிம்மன் குருகுலத்தில் தன் படிப்பை முடித்துக் கொண்டு குரு கிருஷ்ணசந்திரரின் ஆசிகளைப் பெற்றுக் கொண்டு கிளம்பினான். காட்டு வழியே அவன் செல்கையில் அவன் மீது எதிரியின் ஆட்கள் இரும்பு வலையை வீசினார்கள். ஆனால் ஆண் வேடத்தில் வந்த சக்திசேனை அம்புகளை எய்து அந்த ஆட்களைக் கொன்று கீர்த்திசிம்மனைக் காப்பாற்றினாள். இருவரும் ஒருவரையொருவர் அறிந்து கொண்டனர். சக்திசேனை தான் கொண்டு வந்த கடிதத்தை அவனுக்குப் படித்து காட்ட இருவரும் காட்டிலுள்ள தேவியின் கோவிலுக்குப் போய் முத்து மாலையைத் தேடலானார்கள் பிறகு-)*

கீர்த்திசிம்மன் ஆலயத்துள் சென்று துருப்பிடித்த திரிசூலம் ஒன்றை எடுத்து வந்தான். அப்போது எங்கே தோண்டிப் பார்ப்பது என அவனும் சக்திசேனையும் யோசித்தார்கள். வில்வ மரத்தின் முன் தோண்டினால் அதன் வேர்கள் தென்படும். எனவே வேறு இடத்தில்தான் தோண்ட வேண்டும். அது எங்கே என்று பார்க்கலானார்கள்.

கீர்த்திசிம்மன் வில்வ மரத்தின் வடக்கே மூன்றடி தூரம் போய் அங்கு நன்கு பார்க்கலானான். அங்கு செடிகளுக்கிடையே சதுரக்கல் ஒன்று இருப்பதைக் கண்டான். உடனே அவன் சக்தி சேனையைக் கூப்பிட்டு "இதோ கிடைத்து விட்டது அந்த இடம்" எனக் கூறியவாறே தன் திரிசூலத்தால் அந்தக் கல்லை நெம்பித் தள்ளினான். பிறகு இருவரும்



உள்ளது" எனப் பொறிக்கப்பட்டிருந்தது.

அதைப் படித்த இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். பிறகு "இதை நன்கு பத்திரப் படுத்தித்தான் வைத்திருக்கிறார்கள். நாம் சிரமப்பட்டது வீணாகி விட வில்லை. இத்தகட்டில் எழுதியுள்ளதைக் கண்டுபிடித்து விடலாம்" என்றாள் சக்திசேனை.

கீர்த்திவர்மனும் "ஓ! தாராளமாகக் கண்டுபிடித்து விடலாம். அது மிக எளிதான காரியமே. அதற்காக அதிகம் சிரமப்பட வேண்டியதும் இல்லை. சற்று மூளையை உபயோகித்தால் போதும்" என்றான் புன்னகை புரிந்தவாறே.

கீர்த்திசிம்மன் புன்னகை புரிந்தவாறே அந்த தகட்டை வெள்ளிப் பெட்டியில் போட்டுப் பத்திரமாக வைத்துக் கொண்டான். பிறகு பித்தளைப் பெட்டியை இரும்புப் பெட்டிக்குள் வைத்தான். இரும்புப் பெட்டியை குழிக்குள் இறக்கி விட்டு குழியை மண்ணால் நிரப்பினான்.

அப்போது இரவு வந்தது. பௌர்ணமிக்கு மறுநாள் ஆனதால் சற்று நேரத்தில் நிலா ஒளி எங்கும் வீசியது. கீர்த்திசிம்மனும் சக்தி சேனையும் வில்வ மரத்தடியிலிருந்து வந்து கோவிலின் முன்புறத்தை அடைந்தார்கள். கீர்த்திசிம்மனும் "சரி நாம் தேவியை வணங்கிவிட்டு

அங்கே குழி தோண்டினார்கள்.

அக்குழி மூன்றடி ஆழம் தோண்டப்பட்டதும் உள்ளே ஒரு இரும்புப் பெட்டி இருப்பதை கண்டனர். அது துருப்பிடித்த நிலையிலிருந்தது. அதை வெளியே எடுத்துத் திறந்து பார்க்கவே அதனுள் ஒரு பித்தளைப் பெட்டி இருப்பதை அவர்கள் பார்த்தார்கள். அந்தப் பித்தளைப் பெட்டியைத் திறந்து பார்க்கவே அதில் ஒரு வெள்ளிப் பெட்டி இருந்தது.

அதையும் அவர்கள் திறந்து பார்க்கவே அதில் ஒரு வெள்ளித் தகடு இருந்தது. அதில் தங்க எழுத்துக்களில் "படைப்பு படைத்தவன் வீட்டில் படைத்தவனின் பாதி பாகத்தில்



இங்கிருந்து செல்வோம்" எனவே சக்திசேனையும் அவனோடு சேர்ந்து தேவியின் விக்கிரகத்தின் முன் நின்றாள். இருவரும் தேவியின் விக்கிரகத்தை வணங்கி "தாயே! மகாசக்தி! உன் தயவால் இதுவரை எல்லாமே நல்ல விதமாக நடந்துள்ளது. எங்களுக்கு அருள்புரிந்து எங்களை உயர்த்தி விட்டாய். உன்னை தினமும் பூசித்து வரும் பாக்கியத்தையும் எங்களுக்கு அளி" என்று வேண்டினார்கள்.

அவர்கள் அவ்வாறு கூறி முடித்ததும் ஆலயம் முழுவதும் திடீரென ஒளி வெள்ளத்தில் மூழ்கியது. அந்த ஒளியில் தேவியின் விக்கிரகம் பன்மடங்கு ஒளியோடு விளங்கியது. அதன் முகத்தின் புன்னகை அருள் சுரப்பதாக இருந்தது.

கீர்த்திசிம்மனும் சக்திசேனையும் அந்த விக்கிரகத்தின் முன் விழுந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தார்கள். அப்போது "கீர்த்திசிம்மா! நீ தலைநகரில் பன்னீர்த் தடாகத்தின் பக்கம் இருக்கும் மைதானத்தில் ஒரு கோவிலைக் கட்டு. அதில் வரப் போகும் தசமியன்று ஜ்வாலாமுகி என்ற பெயரில் இந்த விக்கிரகத்தைப் பிரதிஷ்டை செய். உனக்கு எல்லாவித நன்மைகளும் உண்டாகுமாக" என ஒரு அசரீரி வாக்கு கூறியது.

அதைக் கேட்டு சக்திசேனையும் கீர்த்திசிம்மனும் மகிழ்ந்து போனார்கள். அவர்கள் எழுந்து விக்கிரகத்தை வணங்கிக் கோவிலுக்கு வெளியே வந்து தலைவாசலை மூடினார்கள். அப்போது கோவிலுள் தோன்றிய ஒளி மறைந்தது. இருவரும் தம் குதிரைகளின் மீது அமர்ந்து மறுநாள் உச்சி வேளைக்குத் தலைநகரை அடைந்தார்கள்.

அப்போது கீர்த்திசிம்மன் "சக்தி! நீ நேராக உன் வீட்டிற்குப் போ. நான் மன்னரைக் கண்டு விட்டு சாவகாசமாக உன் வீட்டிற்கு வருகிறேன்" என்றான். சக்திசேனையும் "சாவகாசமாகவா? சரி பார்ப்போம்" எனக் கூறிவிட்டுத் தன் வீட்டிற்குச் சென்றாள். கீர்த்திசிம்மன் அரண்மனைக்குச் சென்றான்.

மகனின் வரவை ஆவலுடன் எதிர்பார்த்திருந்த அரச தம்பதிகள் அவனைக் கண்டதும் மகிழ்ந்து போனார்கள். நல விசாரிப்புகள் முடிந்ததும் தனிமையில் மன்னனிடம் கீர்த்தி சிம்மன் நடந்ததை எல்லாம் விவரமாகக் கூறினான்.

மன்னன் "ஆகா! தேவியின் அருள் கிடைத்ததா! நாம் பாக்கியசாலிகளே. ஆமாம். முத்துமாலை பற்றிச் சொல்ல வில்லையே" என்று கேட்டான். கீர்த்தி சிம்மனும் "அதுவும் கிடைக்கத்தான் போகிறது. நாம் இன்றிரவு இதற்காக ஜெயசேனனின் வீட்டிற்குப் போக வேண்டும்" என்றான். மன்னனும் "ஆகா! போவோமே" என்று உற்சா கத்துடன் கூறி "ஜெயசேனர் வீட்டிற் குப் போக ஒரு ஆட்சேபணையும் இல்லை. அவரிடமும் நடந்ததை எல்லாம் விவரிக்க வேண்டும். அதுதானே உன் விருப்பம்?" என்று கேட்டான்.

"அதுமட்டுமல்ல இன்னும் ஒரு விஷயம் தெரிந்து கொள்ள வேண்டும்" என்று கீர்த்திவர்மன் கூறித் தன் தந்தையிடம் ரகசியமாக ஏதோ கூறி னான். மன்னனும் "சரி, அதையும் பார்த்து விடலாம்" என்றான்.

அன்றிரவு சாப்பிட்டுவிட்டு மன் னனும் கீர்த்திசிம்மனும் ஜெயசேன னின் வீட்டை அடைந்தார்கள். ஜெய சேனனும் "நீங்கள் இன்றிரவு இங்கு வருவீர்கள் என்று என் மகள் முன்பே கூறிவிட்டாள்" என்றான். அது கேட்டு



மன்னனும் கீர்த்திசிம்மனும் ஒரு வரையொருவர் பார்த்துக் கொண் டார்கள்.

யாவரும் அமர்ந்தபின் மன்னன் "ஜெயசேனா! உன் வீட்டில் பழங் கால சரஸ்வதி பொம்மை ஏதாவது இருக்கிறதா என்று கீர்த்திசிம்மன் கேட்கிறான்" என்றான். ஜெயசேன னும் "ஓகோ! இதே கேள்வியைத் தான் வந்ததும் சக்திசேனை கேட் டாள். நானும் வீட்டிலிருந்த பழைய சரஸ்வதிதேவியின் தந்த பொம் மையை எடுத்துக் கொடுத்தேன். அதை அவள் தன் அறைக்குள் எடுத்துச் சென்று பார்த்துவிட்டு என்னிடமே திருப்பிக் கொடுத்து விட்டாள்" என்றான்.



சுசேன மன்னன் அந்தச் சிமிழை வாங்கி அதன் மூடியைத் திறந்து பார்த்தான். அதில் கண்ணைப் பறிக்கும் முத்து மாலை இருந்தது. உடனே அவன் சக்திசேனையிடம் "இது எங்கிருந்து உனக்குக் கிடைத்ததம்மா?" என்று கேட்டான்.

சக்திசேனையும் "எங்கள் வீட்டு சரஸ்வதி பொம்மைக்குள் இருந்து தான் கிடைத்தது. நாங்கள் தேவியின் ஆலயத்தில் ஒரு வெள்ளித் தகட்டைக் கண்டெடுத்தோம். அதில் எழுதி இருந்ததைப் புரிந்து கொண்டேன். படைப்பு என்றால் இந்த முத்து மாலை. படைத்தவன் வீடு என்றால் எங்கள் வீடு. படைத்தவனின் பாதி பாகம் என்றால் பிரம்மாவின் மனைவியான சரஸ்வதி. அதில் உள்ளது என்றால் அப்பொம்மைக் குள் உள்ளது என்பதே. இதைப் புரிந்து கொண்டே இதனை நான் சரஸ்வதி பொம்மையிலிருந்து எடுத்தேன்" என்றாள்.

அது கேட்டு மூவரும் "பேஷ் பேஷ்" என்று கூறிச் சக்திசேனையைப் பாராட்டினார்கள். அப்போது சுசேனன் "ஜெயசேனா! நம் பந்தயம் நினைவிருக்கிறதா?" என்று கேட்டான். அது கேட்டு சக்திசேனை வெட்கத்தால் தலைகுனிந்து கொண்டாள்.

இங்கு இப்படி யாவரும் மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கி இருக்கையில் காம்போஜ மன்னனும் நகதேச அரச

கீர்த்திசிம்மனும் "சக்திசேனை அந்த பொம்மையைப் பார்த்தாளா?" எனக் கேட்கவே ஜெயசேனனும் "ஆமாம். வெகுநேரம் வரை பார்த்து விட்டே என்னிடம் தந்தாள். அந்தப் பழைய பொம்மையில் அப்படி என்ன அதிசயம் இருக்கிறதோ?" என்றான்.

கீர்த்திசிம்மனும் "அதிசயம் அதில் இருந்தது. ஆனால் இப்போது அதில் இல்லை" என்றான். அப்போது சக்திசேனை வந்து ஒரு அழகிய தந்தச் சிமிழை அவர்களின் முன் வைத்து விட்டு ஒருபுறமாக நின்றாள். கீர்த்தி சிம்மனும் அதை எடுத்துத் தன் தந்தையிடம் கொடுத்து "இது தான் அந்த அதிசயம்" என்றான்.

னும் சாக்கிய மன்னனும் கவலையில் ஆழ்ந்தார்கள்.

தாம் அனுப்பிய ஆட்கள் கொல்லப்பட்டது அவர்களுக்குத் தெரிந்தது. அது மட்டுமல்ல. கீர்த்திசிம்மனுக்கு முத்து மாலை கிடைத்ததோடு தேவியின் தரிசனமும் அருளும் கிடைத்தது என்பதும் அவர்களுக்கு தெரிந்தது. கீர்த்திசிம்மனுக்கும் சக்திசேனைக்கும் விவாகம் விரைவில் நடக்கப் போகிறது என்றும் அதற்கு தடபுடலான ஏற்பாடுகள் நடந்து வருகின்றன என்பதையும் ஒற்றர்கள் வாயிலாக அவர்கள் தெரிந்து கொண்டார்கள்.

அப்போது நாககர்ணன் மற்றவர்களிடம் "இதுதான் சரியான சமயம். இப்போது கோசல நாடு ஒரேயடியாக மகிழ்ந்து கொண்டிருக்கிறது. கீர்த்திவர்மனின் விவாக ஏற்பாடுகளில் மூழ்கி இருக்கிறது. இப்போது நாம் படை எடுத்துப் போனால் கோசலத்தை எளிதில் வென்று விடலாம்" என்றான். மற்ற இருவரும் "சரி அப்படியே செய்வோம்" என உற்சாகம் அடைந்தவர்களாகக் கூறினார்கள்.

ஆனால் அவர்களுக்குத் தெரியாத ஒரு விஷயம் கோசலமும் படை எடுப்பிற்கான ஏற்பாடுகளை ரகசியமாகச் செய்து விட்டது என்பதே. அது ரகசியத் திட்டம். அதன்படி அந்த மூன்று மன்னர்களும் படை எடுத்து வருமுன் தனித்தனியாக



அம்மூவரையும் அவர்கள் எதிர்பாராத விதத்தில் தாக்குவதுதான் அது. அதன்படி கீர்த்திசிம்மன் தானே ஒரு பெரும் படைக்குத் தலைமை தாங்கி திடீரெனக் காம்போஜ நாட்டைத் தாக்கி அதன் மன்னனைச் சிறைப் பிடித்தான்.

கோசல சேனாதிபதி ரணமல்லன் நகதேசத்தின் மீது படை எடுத்து போர் புரிந்து நாக கர்ணனைச் சிறைப் பிடித்து அந்நாட்டைக் கைப்பற்றினான். காம்போஜத்தை வென்ற கீர்த்திசிம்மன் சாக்கிய நாட்டின் மீது தாக்குதலை நடத்தி குந்தினவர்மனைச் சிறைப்பிடித்து அந்நாட்டையும் கைப்பற்றி விட்டான்.

இந்த மூன்று நாடுகளுக்கும்

உதவி புரிந்த வேறு இரு நாடுகளின் மீதும் கீர்த்திசிம்மன் படை எடுத்துப் போய் அவற்றையும் கைப்பற்றினான். இதை எல்லாம் கண்ட மற்ற சிறிய நாடுகள் தாமாகவே முன் வந்து தாம் கோசலத்தின் கீழ் இருந்து கப்பம் கட்டுவதாக ஒப்புக் கொண்டன.

இவ்விதமாகக் கீர்த்திசிம்மன் வெற்றி மாலை சூட்டிக் கொண்டு கோசலத்தின் தலைநகருக்குத் திரும்பி வந்தான். அப்போது ஜ்வாலமுகி தேவியின் ஆலய்ம் கட்டி முடிக்கப்பட்டிருந்தது. வெற்றிவிழாக் கொண்டாட்டங்களோடு கீர்த்திசிம்மனின் விவாகத்திற்கான ஏற்பாடுகளும் பெருத்த அளவில் நடந்து கொண்டிருந்தன.

கோசல மன்னனும் ராணி வைஷ்ணவி தேவியும் தம் மகனான கீர்த்தி சிம்மனுக்கு ஜெயசேனனின் புதல்வி சக்திசேனையை மணமுடித்து வைத்தார்கள். ஆசாரியார் கிருஷ்ண சந்திரர் விவாகத்திற்கு வந்து மணமக்களை ஆசீர்வதித்தார். நாடே இத்திரு மணத்தால் மகிழ்ச்சிக் கடலில் மூழ்கியது.

ஜ்வாலாமுகி தேவியின் ஆலயம் கட்டி முடிக்கப்பட்டதால் காட்டிலிருந்து தேவியின் விக்கிரகம் கொண்டு வரப்பட்டது. சித்திரை மாதம் வெள்ளிக் கிழமை தசமி திதியன்று மங்கள வாத்தியங்கள் முழங்க கீர்த்திசிம்மனும் சக்தி சேனையும் ஜ்வாலாமுகி தேவி விக்கிரகத்தைப் புதிதாக கட்டப்பட்ட கோவிலுள் பிரதிஷ்டை செய்தார்கள்.

தலைமுறை தலைமுறையாக முயன்று கண்டுபிடிக்க முடியாத சக்தி வாய்ந்த முத்து மாலையைக் கீர்த்திசிம்மனும் சக்திசேனையும் சேர்ந்து கண்டுபிடித்ததற்காக சுசேன மன்னனும் ராணி வைஷ்ணவி தேவியும் ஜெயசேன தம்பதிகளும் பெருமிதம் கொண்டார்கள். அவர்கள் நீடூழி வாழ வேண்டும் எனவும் வாழ்த்தினார்கள்.

(முடிவுற்றது)






# மந்திரக் கத்தி

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அங்கு தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு அவன் மயானத்தை நோக்கிச் செல்கையில் அதிலிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! இந்த பயங்கர நள்ளிரவில் நீ இப்படி விடாப்பிடியாக முயற்சி செய்வதைப் பார்த்தால் ஏதோ அபூர்வ சக்தி ஒன்றை அடைய முயற்சிப்பதாகத் தெரிகிறது. சில சமயங்களில் இந்த அபூர்வ சக்தி பயனற்றும் போய் விடலாம். மந்திர சக்தி வாய்ந்த வாள் தன்னிடமிருந்தும் சக்திசிம்மன் என்ற அரசகுமாரன் தான் விரும்பிய அரசகுமாரியை மணக்க முடியாமல் போனான். இதை விவரமாகக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறித் தொடர்ந்து அக்கதையைச் சொல்லலாயிற்று.

## வேதாளம் சொல்லும் கதை



சாம்யபுரியை சக்திசிம்மன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். சாம்யபுரியின் இருபுறங்களிலும் இருந்த நாடுகளான நீலபுரியும், மரகதபுரியும் எப்போது சாம்யபுரியை கைப்பற்றலாம் என்று பார்த்துக் கொண்டிருந்தன.

ஒருமுறை தொடர்ந்து இரு வருடங்களாக மழை பெய்யாமல் போகவே சாம்யபுரியில் கடும் வறட்சி ஏற்பட்டது. இந்நிலையில் பெரிய படையை வைத்துக் கொள்ள இயலாது என எண்ணி பாதியாகக் குறைத்து விட்டான். இதனால் அண்டை நாடுகள் தன் நாட்டின் மீது படையெடுக்கத் தயாராகி வருகின்றன என்பதை ஒற்றர்கள் வாயிலாக சக்திசிம்மன் அறிந்தான்.

ஒருநாள் சக்திசிம்மன் தவவலிமை பொருந்திய தபனேந்திரரைத் தன் ரகசிய அறைக்கு அழைத்து ஆலோசனை கேட்டான். அவர் ராஜகுரு. மன்னனின் தாத்தாவின் காலத்திலிருந்து அப்பதவியை வகித்து வருபவர்.

சக்திசிம்மன் எதிரிகள் படை எடுத்தால் என்ன செய்வது என்று அவரிடம் கேட்கவே அவரும் சிறிது நேரம் கண்களை மூடி தியானத்தில் இருந்து விட்டு "எதிரிகள் தாக்க வந்தால் அவர்களை எதிர்த்துப் போராடித்தானாக வேண்டும். ஆனால் நீ கவலைப்படாதே. வெற்றி உனக்கே. நீ உன் பூஜை அறைக்குள் போ. அங்குள்ள காளிதேவியின் விக்கிரகத்தின் கீழ் ஒரு திருகுப்பிடி உள்ளது. அதை நீ வலதுபுறமாகத் திருப்பி னால் கீழே ஒரு பலகை நகரும். அங்குள்ள பள்ளத்தில் ஒரு தங்க வாள் உள்ளது. அதைத் தன் கையில் வைத்திருக்கும் எவனும் தன் மிகப் பலமான எதிரியை எளிதில் வென்று விடுவான். ஆனால் தர்ம நியாயத்திற்காகப் போராடினாலே இது வெற்றியைத் தரும். நியாயமற்ற விஷயத்திற்காக இதைக் கொண்டு போராடினால் இது மரக்கத்தியாக மாறிவிடும்" என்றார்.

சக்திசிம்மன் தபனேந்திரர் கூறிய படி தன் பூஜை அறைக்குள் சென்று காளிதேவியை வணங்கினான். பிறகு விக்கிரகத்தின், கீழுள்ள திருகுப் பிடியைத் திருகினான். மறுவினாடி அங்

கிருந்த பலகை நகர்ந்தது. அங்குள்ள குழியில் பளபளவென மின்னும் மூன்றடி நீளத் தங்க வாள் இருந்தது. அதன் பிடியில் மரகதக் கற்கள் பதிக்கப்பட்டிருந்தன.

சக்திசிம்மன் அந்த வாளை எடுத்துக் கொண்டான். அப்போது அவனது உடலில் ஏதோ ஒரு புதிய சக்தி புகுந்ததை அவன் உணர்ந்தான். இதற்கு ஒரு வாரத்திற்குப் பின் நீலபுரி மன்னனும் மரகதபுரி மன்னனும் சாம்யபுரி மீது படையெடுத்து வந்தனர். சக்திசிம்மனும் தங்க வாளை எடுத்துக் கொண்டு தன் சிறு படையுடன் போர்க்களத்திற்குச் சென்றான்.




அப்போது எதிரிப் படை வீரர்கள் தம் ஒவ்வொருவர் முன் ஒரு சக்திசிம்மன் வாளுடன் நிற்பதைக் கண்டனர். சக்திசிம்மன் தாக்குதலைச் சமாளிக்க முடியாமல் எதிரிப் படைகள் சிதறி ஓடின. நீலபுரி மன்னனும் மரகதபுரி மன்னனும் சக்திசிம்மனுக்கு ஆண்டுதோறும் கப்பம் கட்டி வருவதாக ஒப்புக் கொண்டு திரும்பிச் சென்றனர். அப்போதிருந்து சக்திசிம்மனிடம் இருக்கும் மந்திரவாளின் மகிமை யாவருக்கும் தெரியலாயிற்று.

ஒருமுறை சக்திசிம்மன் வேட்டையாடக் காட்டிற்குச் சென்றான். வேட்டை முடிந்து மாலையானதும் அவன் தலைநகருக்குத் திரும்பலானான். திடீரெனக் கொஞ்ச தூரத்தில் "ஐயோ! காப்பாற்றுங்கள்! காப்பாற்றுங்கள்" என்ற கூக்குரல் கேட்கவே அவன் தன் குதிரையை அக்குரல் வந்த திசையில் வேகமாக ஓட்டிச் சென்றான்.

ஒரு மரத்தின் கீழ் ஒரு பல்லக்கு இறக்கி வைக்கப்பட்டிருந்தது. அதன் பக்கம் ஒரு அழகான பெண்ணும் அவளைச் சுற்றி நான்கைந்து பெண்களும் நடுநடுங்கிக் கொண்டு நிற்பதை அவன் கண்டான். அவர்கள் சக்திசிம்மனைக் கண்டு சற்று தைரியம் அடைந்தார்கள். சற்று தூரத்தில் ஒரு வாலிபன் அரசாங்க வீரர்களுடன் சண்டை போட்டுக் கொண்டிருப்பதை அவன் கண்டான். அப்போது அந்தப் பெண்கள் "மாவீரரே! அந்தக் கயவன் எங்கள் இளைய ராணியைக்



கவர்ந்து செல்ல முயன்றான்" என்றனர்.

அந்த வாலிபன்அரசாங்க வீரர்களை பயங்கரமாகத் தாக்கி ஒவ்வொரு வீரனாக வீழ்த்திக் கொண்டிருந்தான். சக்திசிம்மன் தன் உறையிலிருந்து மந்திர வாளை உருவிக் கொண்டு அந்த வாலிபனைத் தாக்கினான். மறுவினாடியே அந்த வாலிபனின் கையிலிருந்த வாள் வெகு தூரத்தில் போய் விழுந்தது.

சக்திசிம்மன் தன் வாளை அவனது கழுத்தின் மீது வைத்து "யார் நீ? இந்த அரசகுமாரியை ஏன் கவர்ந்து செல்ல முயல்கிறாய்?" என்று கேட்டான். அந்த வாலிபனும் தலை குனிந்தவாறே "நீங்கள் மாபெரும் வீரர் என்று தெரிகிறது. என் பெயர் கிரிதரன். மலயகிரி இளவரசன். நான் கமலபுரத்து இளவரசியான இந்தக் கனகாங்கியை உயிருக்கு உயிராக நேசிக்கிறேன். ஆனால் இவள் சௌம்யபுர மன்னன் சக்திசிம்மனை மணக்க விரும்புகிறாள் என அறிந்ததும் இவளைக் கவர்ந்து கொண்டு போய் ராட்சஸ விவாகம் செய்து கொள்ள நினைத்தேன். ஆனால் நீங்கள் என்னை இப்போது அவ்வாறு செய்ய முடியாமல் செய்து விட்டீர்கள்" என்று கூறினான்.

சக்திசிம்மன் சற்று நேரம் எதுவும் பேசாமல் இருந்தான். பிறகு அவன் "நீ ஒரு பெண்ணின் விருப்பம் என்ன என்று தெரிந்து கொள்ளாமல் இப்படிச் செய்தது தவறே. இனி ஒருபோதும் இப்படிச் செய்யாதே" என்றுகூறித் தன் வாளை உறையில் போட்டான்.

அப்போது அந்த வாளைக் கூர்ந்து பார்த்த கிரிதரன் "தாங்கள் சாம்யபுரி மன்னர் சக்திசிம்மரா?" என்று கேட்டான். சக்திசிம்மனும் "ஆம்" என்று கூறியவாறே கனகாங்கியைப் பார்த்தான். அதைக் கேட்ட கனகாங்கியும் தன் தோழியிடம் "வரும் சுக்கிலபட்சப் பஞ்சமியன்று என் சுயம்வரத்தை என் தந்தை வைத்திருக்கிறார் என்று அவரிடம் சொல். அப்போது வாட்போர் போட்டி நடக்கும். அதில் அவரும் அவசியம் கலந்து கொள்ள வேண்டும் என்றும் கூறு" என்று

சொன்னாள்.

சக்திசிம்மனும் புன்னகை புரிந்து "கண்டிப்பாக வருகிறேன்" எனக் கூறித் தன் குதிரை மீதமர்ந்து தன் தலைநகருக்குச் சென்றான். பஞ்சமி யன்று சக்திசிம்மன் நல்ல ஆடைகளை அணிந்து வாசனை திரவியங்களைத் தன் உடலில் பூசிக் கொண்டு கிளம்ப லானான்.

அப்போது பட்டத்து ராணி சுசீலா கண்ணீர் உகுத்தவாறே "நீங்கள் சுயம் வரத்திற்கா போகிறீர்கள்? அக்கினி சாட்சியாக மணந்த நான் உயிருடன் இருக்கையில் நீங்கள் வேறொரு பெண்ணை மணப்பது சரியா?" என்று கேட்டாள். சக்திசிம்மனோ "கனகாங்கி கட்டழகி. மேலும் க்ஷத்திரியர்கள் ஒன்றுக்கும் மேற்பட்டு விவாகங் களைச் செய்து கொள்ளலாம்" என்று கூறி கனகபுரிக்கு போனான்.

அவன் சுயம்வர மண்டபத்துள் நுழைந்ததும் தன் மந்திர வாளை உருவி எடுத்துக் கொண்டு "என்னு டன் வாட்போர் புரிய யார் வருகிறீர் கள்?" என்று சவால் விட்டான். அது கேட்டு அங்கிருந்த அரசகுமாரர்கள் வந்திருப்பது சக்திசிம்மன் என்றும் அவனிடம் மந்திரத் தங்க வாள் இருக்கிறது என்பதையும் அறிந்து அவனோடு வாட்போர் புரிய யாரும் வரவில்லை.

ஆனால் ஒரு மூலையிலிருந்த கிரிதரன் எழுந்து "போட்டிக்கு நான் தயார்" என்று கூறித் தன் வாளை உருவிக் கொண்டு முன் வந்தான். கிரிதரனை அடையாளம் கண்டு






கொண்ட சக்திசிம்மன் "ஓ! நீயா! அன்று காட்டில் என்னிடம் தோற்று ஓடியது நினைவில்லையா?" என்று கேட்டான்.

அதற்கு பதில் கூறுவது போல கிரிதரன் வாளைச் சுழற்றவே சக்தி சிம்மன் அவனோடு வாட்போர் புரிய லானான். அவனது தங்க வாள் கிரி தரனின் வாளை 'டங்'கென்ற ஒலி யோடு தாக்கியதும் மரக்கத்தியாக மாறிவிட்டது. இதைக் கண்ட சக்தி சிம்மன் திகைத்துப் போனான். அரச குமாரி கனகாங்கி வெற்றி பெற்ற கிரிதரனின் கழுத்தில் மாலையைப் போட்டாள். அப்போது சக்திசிம்ம னின் கையிலிருந்த வாள் முன்போல் தங்க வாளாக மாறியது.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னனே! மந்திரத் தங்க வாளின் உதவியால் சக்தி சிம்மன் தன் இரு அண்டை நாட்டு மன்னர்களைத் தோற் கடித்தான். கானகத்திலும் கிரிதரனை நொடியில் தோற்கடித்தான். ஒரு விஷயம் நியாயமற்றது என இருக்கும் போதுதானே தங்க வாள் மரக்கத்தி யாக மாறிவிடும்? இப்படி இருக்க தன்னை விரும்பிய கனகாங்கியை மணக்க சக்திசிம்மன் சுயம்வரத்தில் கலந்து கொண்டு கிரிதரனுடன் வாட் போர் புரிந்த போது அந்தப் போர் நியாயமற்றது என்றாகி விட்டதா? சக்திசிம்மனை மிகவும் விரும்பிய கன காங்கி முடிவில் கிரிதரனின் கழுத்தில் மாலையைப் போட்டு அவனைத் தன் கணவனாக ஏற்றது ஆச்சரியமாக இல்லையா? போட்டியின்போது மரக்கத்தியாக மாறிய அந்த மந்திரக் கத்தி கனகாங்கி கிரிதரன் கழுத்தில் மாலையைப் போட்டு அவனைக் கணவனாக ஏற்றதும் மீண்டும் தங்கக் கத்தியாக மாறியதன் மர்மம் என்ன? என் இந்த சந்தேகங்களுக்கு விடை தெரிந்திருந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்துச் சுக்கு நூறாகி விடும்" என்றது.

அதற்கு விக்கிரமனும் "நியாய தர்ம யுத்தத்தின் போது அந்த மந் திர வாள் அதனை வைத்திருப்பவ னுக்கு வெற்றியை அளிக்கும் என்ப தில் சிறிதும் சந்தேகமில்லை. ஒரு நாடு வறட்சியால் பாதிக்கப்பட்டு

கஷ்டப்படுக் கொண்டிருக்கும் போது அதை இன்னொரு நாடு தாக்குவது க்ஷத்திரிய தர்மம் அல்ல. அது அநியாயம். அதனால்தான் அப்போரில் சக்திசிம்மனுக்கு மந்திரவாள் வெற்றியை அளித்தது. கிரிதரன் தான் விரும்பிய பெண்ணை வன்முறையால் கவர்ந்து கொண்டு போக முயன்றான். அரசகுமாரி கனகாங்கிக்கு அப்போது அவன் மீது எள்ளளவு பிரியமும் . இருக்கவில்லை. எனவே கிரிதரனின் அடாத செயல் அநியாயமானதே! அதனால்தான் சக்திசிம்மனுடன் அப்போது நடந்த வாட்போரில் கிரிதரன் தோற்றுப் போனான். இந்த இரண்டு விஷயங்களில் நியாயம் சக்திசிம்மனின் பக்கமே இருந்தது. பட்டத்து ராணி இருக்கும்போது ஒரு மன்னன் இன்னொரு விவாகம் செய்து கொள்ளத் தடை எதுவும் இல்லை என்றாலும் அது தர்ம நியாயம் என்றாகிவிடாது. அதுதான் மணந்த முதல் மனைவிக்கு துரோகம் செய்வது போலாகும். அதனால்தான் சக்திசிம்மன் சுயம்வரத்தில் கிரிதரனுடன் வாட்போர் புரிந்தபோது அந்த மந்திரத் தங்க வாள் மரக்கத்தியாக மாறியது. கனகாங்கி சுயம்வர விதிப்படி வாட்போரில் வெற்றி பெற்ற கிரிதரனைத் தான் கணவனாக ஏற்க வேண்டும். இதில் அவளது விருப்பு வெறுப்பிற்கு இடமே இல்லை. எனவே அதை அவள் மீறுவது நியாயமல்ல. அவள் கிரிதரனின் கழுத்தில் மாலையைப் போட்ட கணத்திலேயே சக்தி சிம்மன் அவளை இனி மனைவியாக அடைய முடியாது என்றாகி விட்டது. அவன் அதை உணர்ந்ததும் மரக் கத்தியாக மாறியது மறுபடியும் தங்க வாளாகி விட்டது" என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பிப் போய் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.



# எனக்கு குழந்தைகள் இல்லை!

உலகநாதன் ஒரு வீட்டின் ஒரு சிறு பகுதியில் வாடகைக்கு இருந்து வந்தான். ஆனால் திடீரென வீட்டு சொந்தக்காரன் அவனிடம் "என் மகனுக்கு கல்யாணம் நிச்சயமாகி விட்டது. மருமகள் வந்தால் நீ இருக்கும் பகுதியும் எங்களுக்கு வேண்டும். அதனால் இன்னும் ஒரு மாதத்திற்குள் காலி செய்து கொடுத்து விடு" என்று கண்டிப்பாக கூறிவிட்டான்.

உலகநாதன் வாடகைக்கு வீடு கிடைக்குமா என்று அலைந்தான். ஆனால் வீடுகள் காலி இருந்தும் வீட்டுக்காரர்கள் அவனுக்கு வாடகைக்குக் கொடுக்க இணங்கவில்லை. அவனுக்கு நான்கு குழந்தைகள் இருப்பதால் ஒரே தொந்திரவாக இருக்கும் என்பதே அதற்குக் காரணம்.

குழந்தைகள் இருப்பதால்தான் தன் தந்தைக்கு வாடகைக்கு வீடு கொடுக்க மறுக்கிறார்கள் என்று அறிந்த உலகநாதனின் எட்டு வயது மகன் ஒரு வீட்டுக்காரரிடம் போய் "ஐயா! எனக்குக் குழந்தைகள் இல்லை. தாயும் தந்தையும் ஒரு தமக்கையும் இரண்டு தங்கைகள் மட்டும் இருக்கிறார்கள். உங்கள் வீட்டை வாடகைக்கு எனக்குக் கொடுங்கள்" என்றான்.

சிறுவனின் புத்திசாலித்தனத்தைக் கண்டு வியந்து அந்த வீட்டுக்காரன் அவனுக்கு வீட்டை வாடகைக்குக் கொடுத்தான்.



## அம்புலிமாமா அனுபந்தம் - 71

நம் நாட்டு மரங்கள் :



### பவளமல்லி

பவளமல்லி மரத்தின் மலர்களின் மேல் பாகம் மல்லிகை பூ போலவும் மலரின் காம்பு பவள நிறத்திலும் இருப்பதால் இதற்கு இப்பெயர் ஏற்பட்டது. இதனைப் பாரிஜாதம் என்றும் கூறுவார்கள். ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா தம் மனைவி சத்தியபாமாவின் விருப்பத்தை நிறைவேற்ற தேவலோகம் சென்று பாரிஜாத மரத்தை வேரோடு பிடுங்கி எடுத்துக் கொண்டு கருடன் மீது அமர்ந்து பூலோகத்திற்கு கொண்டு வந்தார் எனப் பிரபலமான கதை ஒன்று உண்டு.

மற்றொரு கதைப்படி பாரிஜாதம் என்ற பெயர் கொண்ட ஒரு அரசகுமாரி சூரியனைப் பெரிதும் விரும்பினாளாம். இரவானதும் சூரியன் இல்லாது போகவே அவள் மனமொடிந்து இறந்து போனாளாம். அவளது உடல் எரிக்கப் படவே அந்தச் சாம்பலால் வளர்ந்தது தான் பாரிஜாத மரமாம். அந்த மரத்தின் மலர்கள் சூரியனின் கதிரொளியைத் தாங்க முடியாமல் காலையிலேயே மரத்திலிருந்து விழுந்து விடுகின்றன.

தாவரவியலின்படி அம் மரத்தை "நிக்டாண்டெஸ் அர்பார்ட்ரிஸ்பிஸ்" என்கிறார்கள். இரவில் பூத்து உதிரும் மரம் என்பது இதன் பொருள். வட இந்தியாவில் இதனை 'இரவு ராணி' என்கிறார்கள்.

நல்ல வாசனையுடன் வெள்ளை இதழ்களையும் சிவப்புக் காம்புகளையும் கொண்ட இச்சிறிய மலர்கள் கொத்துக் கொத்தாகப் பூத்து சூரிய ஒளி பட்டதும் மரத்திலிருந்து உதிர்ந்து விழுகின்றன. அந்த மரம் நம் நாட்டின் எப்பகுதியிலும் வளர்கிறது. அதிக உயரமில்லாமல் கிளைகளில் எதிர் எதிராக இலைகளையும் கொண்டிருக்கும். இதன் இலையின் மேற்பகுதி சொரசொரப்பாக இருக்கும்.




வர்த்தமான மகாவீரர் கௌதம புத்தரைப் போலவே வைசாலிக்கருகே இருந்த ஒரு அரச வம்சத்தில் பிறந்தவர். புத்தருக்கு அறுநூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தவர். இவரை ஜினர் என்றும் குறிப்பிடுவார்கள். ஜினர் என்றால் ஐம்புலன்களையும் வென்றவர் என்பது பொருளாம். இந்த ஜினர் போதித்த மதம் ஜைன மதமாகப் பரவியது.

மகாவீரர் தமக்கு முன் இருபத்து மூன்று 'தீர்த்தங்கரர்கள்' கூறிய அறிவுரைகளைத் தொகுத்து மக்களுக்கு உபதேசம் செய்தார். இவர் இருபத்து நான்காவது தீர்த்தங்கரர்.

மகாவீரர் பனிரெண்டு ஆண்டுகள் தொடர்ந்து தியானத்தில் மூழ்கி 'கைவல்யம்' என்ற உயரிய ஞானம் பெற்றார். மகாவீரரின் அறிவுரைகளை அங்கம், பூர்வம், பிரகரணம் என்றெல்லாம் தொகுத்து வைத்திருக்கிறார்கள். விநயரும் விஜயரும் தொகுத்த "லோகப் பிரகாசம்" என்ற நூல் ஜைனமத தத்துவங்களை நன்கு விளக்குகிறது.

மகாவீரரும் கடும் சன்னியாச வாழ்க்கையை மேற்கொண்டு தூய இன்பம் காண வழிகாட்டினார். பிறப்பு இறப்பு என்பது இல்லாது போனாலே இந்த இன்பம் கிட்டும். முழு அறிவு, முழு தரிசனம், முழு நெறி என்ற மூன்று ரத்தினமானவற்றைத் தனதாக்கி நடந்தால் அந்நிலையை அடையலாம்.

விதி, மறுபிறப்பு, தவம் செய்து

முக்தி அடைதல் ஆகிய கொள்கைகளில் ஹிந்து மதத்திற்கும் ஜைன மதத்திற்கும் கருத்து வேறுபாடு இல்லை.

ஜைனமதம் அஹிம்சை, அபரிகிரகம் அதாவது சேர்த்து வைக்காமை, அநேகாந்தம் என்ற மூன்று கொள்கைகளை வலியுறுத்துகிறது. இவற்றில் அஹிம்சைக்கு முதலிடம் அளிக்கிறது. செயலாலன்றி வாக்காலும் மனத்தாலும் ஹிம்சையை விட்டொழிக்க வேண்டும் என்று போதிக்கிறது.

இதுபோல எதுவும்சேர்த்துக் கொள்ளாமல் பற்றற்று இருப்பதே அபரிகிரகம் என்பது.

இதனால்தான் மகாவீரர் ஆடைகளைக் கூடத் துறந்தார். ஜைன மதத்தின்படி உணவு கூட ஒரு வகையான பந்தமே. உணவு ஏற்காமல் உயிரை விடும் ஜைனர்கள் கூட இப்போதும் இருக்கிறார்கள்!

மகாவீரர் நிர்வாண முக்தி அடைந்த பின் ஜைனர்கள் திகம்பரர்கள், சுவேதாம்பரர்கள் என்று இருபிரிவுகளாயினர். திகம்பரர்கள் ஆடைகளை அணியாமல் மதக் கோட்பாடுகளைக் கடுமையான நியமங்களோடு அனுஷ்டிப்பவர்கள். சுவேதாம்பரர்கள் வெள்ளைநிற ஆடை அணிகின்றனர்.



# உங்களுக்குத் தெரியுமா?

1. 'குளங்கள் நகர்' என்று பெயர் பெற்ற இந்திய நகர் எது?
2. புகழ்பெற்ற ஆங்கில எழுத்தாளர் ஒருவர் தாம் எழுதும் போது தாம் வளர்க்கும் பூனையைத் தம் தோளின் மீது ஏற்றிக் கொள்வாராம். அவர் யார்?
3. இராமேஸ்வரம் தீவு எந்த வளைகுடாவில் உள்ளது?
4. பயணம் செய்கையில் தாம் வளர்க்கும் பிராணிகளை எல்லாம் கூடவே அழைத்துச் செல்லும் ஆங்கிலக் கவிஞர் யார்?
5. நம் நாட்டில் 'நகரும் சிகரங்கள்' உங்கே உள்ளன?
6. பல மொழிகளை அறிந்து 'அற்புதக் கதைகள்' படைத்து புகழ்பெற்றவர் யார்?
7. புத்தர் பிறந்த லும்பினி வனத்தின் இந்நாளையப் பெயர் என்ன?
8. 'பாகிஸ்தான்' என்ற சொல்லை உருவாக்கியவர் யார்?
9. மிகப் பழைய எகிப்திய நூல் எது?
10. உலகில் சர்க்கரையை மிக அதிகமாக உற்பத்தி செய்யும் நாடு எது?
11. உலகில் மிக அதிகமானவர்கள் பேசும் மொழி எது?
12. 'பழைய கட்டளைகள்', 'புதுக்கட்டளைகள்' ஆகிய இரண்டிலும் உள்ள நூல்கள் எவ்வளவு?
13. கி.மு. நான்காவது நூற்றாண்டில் நம் நாட்டிற்கு வந்து பயண நூல் எழுதிய ஐரோப்பிய யாத்திரிகர் யார்?
14. அசோகச் சக்கரவர்த்தி தன் தூதர்களை அயல் நாடுகளுக்கு அனுப்பியபோது இலங்கையின் மன்னர் யார்?
15. 'எழுத்துக் கணக்கு' எனப்படும் அல்ஜிப்ராவில் மிகப் பழைய நூலை எழுதிய இந்தியர் யார்? அந்நூலின் பெயர் என்ன?

## விடைகள்

1. உதயபூர்.
2. எட்கார் ஆலென் போ.
3. மன்னார் வளைகுடா.
4. லார்ட் பைரன்.
5. அகமதாபாத்.
6. ஜாகப் கிரிம்.
7. ரும்மின் தேய் (நேபாளம்).
8. சௌதரி ரஹ்மத் அலி. 1933ல்.
9. 'இறந்தோர் வரலாறு' கி.மு. 3200ல்.
10. இந்தியா.
11. சீன மொழி
12. 39; 27.
13. கிரேக்க நாட்டு மெகஸ்தனிஸ்.
14. தேவாநாம் பிரிய திஸ்ஸா.
15. பாஸ்கராச்சாரியார், லீலாவதி





# அவளே புத்திசாலி

சுப்புவுக்கு தான் அதிபுத்திசாலி என்ற நினைப்பு. ஒருநாள் அவன் வீட்டிற்கு அவனது தாய் மாமன் வந்தார். அவர் அவனிடம் "நீதான் அதிபுத்திசாலியாயிற்றே. கரிசலாங் கண்ணிச் சாற்றை எடுத்து நெற்றி மீது தடவிக் கொண்டு ஒரு மந்திரம் உச்சரித்தால், பூமிக்குள் இருக்கும் புதையல் தெரியுமாமே. இது உண் மையா?" என்று கேட்டார்.

சுப்பு பலமாகச் சிரித்து "யார் இதைச் சொன்னது? இதையெல்லாம் நீங்கள் நம்புகிறீர்களா? மந்திரமாவது, மாங்காயாவது" என்று கேலி செய் தான். அவன் மாமாவும் "அப்படியா? இந்த மூளை என் மகள் கமலாவுக்கு இல்லையே. அவள் இம்மாதிரி விஷ யங்களை நம்புவதோடு எல்லோரிட மும் சொல்லி வருகிறாளே" என்றார்.

சுப்பு கமலாவைப் பற்றி அறி வான். அதனால் அவளை அவ னுக்கு மணம் பேச முயன்றபோது அந்த மக்குப் பெண் தனக்கு வேண் டாம் என்று கூறி விட்டான். இப் போது மாமன் கூறியதைக் கேட்டதும் அவன் "இதற்கு நாம் என்ன செய் வது? சிலர் பிறக்கும் போதே மக்காகக் பிறந்து விடுகிறார்கள்" என்றான்.

அவனது மாமனோ "கமலாவை மக்கு என்று சொல்லிவிட முடியாது. அவள் எதையோ நம்புகிறாள். அது சரியல்ல என்று நாம்தான் அவளுக்கு புத்தியில் படும்படிச் சொல்ல வேண் டும்" என்றார். சுப்புவுக்கு இது மாமா விடும் சவால் போலத் தோன்றி யது. அவன் உடனேயே கிளம்பித் தன் மாமாவின் ஊரை அடைந்தான்.

அங்கு அவன் கமலாவைக் கண்டு அவளிடம் சில கேள்விகளைக் கேட்க, அவள் அவற்றிற்குச் சரியான பதில் அளித்தது அவனுக்கு வியப்பைத் தந்தது. இராமயணம், மகாபாரதம்

-கி. அருணா-

போன்ற காவியங்களை அவள் படித்திருந்ததோடு கணக்கிலும் அவள் 'புலி'யாக இருப்பது கண்டு ஆச்சரியப்பட்டான்.

அப்போதும் அவன் "வெறும் புத்தகப் படிப்பு மட்டும் போதாது. பொது அறிவும் வேண்டும். அது இருந்தால் நீ எதையும் உடனே நம்பிவிட மாட்டாய்" என்றான். கமலாவும் "அப்படி நான் எதை நம்பினேனாம்?" என்று கேட்டாள்.

சுப்புவும் மாமன் கூறிய கரிசலாங்கண்ணிச் சாறு பற்றிக் கூறி "இதை நீ நம்புகிறாயா?" என்று கேட்கவே கமலா சிரித்துக் கொண்டே "அது உண்மைதான். என் சிநேகிதி சீதாதான் அதைச் சொன்னாள். அவள் ஒருபோதும் பொய் சொல்லமாட்டாள். அவளுக்குக் கல்யாணமாகி ஒரு வருஷம் ஆகி விட்டது. ஆறு மாதங்களுக்கு முன் அவள் கணவன் தான் இதைச் சொன்னானாம். கணவன் மனைவியிடம் பொய்யா சொல்வான்?" என்று கேட்டாள்.

சுப்புவும் "உன் மாதிரி மனைவி இருந்தால் அவள் கணவன் சொன்ன எதையும் நம்பி விடுவாள். அது பொய்யா மெய்யா என்றுகூட யோசிக்க மாட்டாள். அது சரி. கரிசலாங்கண்ணி விஷயத்திற்கு வருவோம்" என்றான். கமலாவும் "நான் சொன்னது உண்மையே. வேண்டுமானால் சீதாவின் கணவனையே நீங்கள் சந்தித்துக் கேட்டுப் பாருங்கள்" என்றாள்.

சுப்புவும் சீதாவின் கணவனைச்



சந்தித்து கரிசலாங்கண்ணி பற்றிக் கேட்டான். அதற்கு அவனும் "அதற்கு எட்டு சுலோகங்களில் மந்திரங்கள் உள்ளன. அவற்றை ஒரு குறிப்பிட்ட வரிசையாக உச்சரிக்க வேண்டும். அப்போதுதான் அதன் பலன் கிட்டும். இதைப் பெண்கள்தான் செய்ய வேண்டும். சீதா ஒரு நாள் இதைச் செய்தாள். ஒரு எலி வங்கில் நூறு வராகன்கள் இருப்பது அவளுக்குத் தெரிந்ததாம். அவளுக்கு அந்த அபூர்வ சக்தி ஒரு மணி நேரத்திற்கு இருந்தது. வேறு யாராவது இருந்தால் அங்கும் இங்கும் அலைந்து வேறு எங்காகிலும் புதையல் இருக்கிறதா என்று பார்த்திருப்பார்கள். சீதா கிடைத்ததே போதும் என்று திருப்தி அடைந்து விட்டாள். அந்த சந்தோஷத்தில் சுலோக வரிசையை மறந்து விட்டாள். அதை நினைவிற்குக் கொண்டு வர பனிரெண்டு ஆண்டுகளாகுமே" என்றான்.

சுப்புவும் "அவ்வளவு நீண்ட காலமா?" என்று கேட்கவே அவனும் "நாங்கள் கூட நீங்கள் நினைப்பது போலத்தான் எண்ணினோம். ஆனால் உங்கள் மாமன் மகள் கமலா அந்த எட்டு சுலோகங்களை எவ்வளவு வரிசைப்படுத்தலாம் என்று கணக்கிட்டு நாற்பதாயிரத்து முன்னூற்று இருபது என்று சொன்னாள். இந்த சுலோகங்களை ஒரு அமாவாசையன்று சொன்னாலே பலன் கிடைக்கும். ஒரு ஆண்டிற்குப் பனிரெண்டு அமாவாசைகள். நாம் அதிர்ஷ்டமுள்ளவர்களானால் பனி





லாமே. இதை என் சிநேகிதி ஒருத்தி சொன்னாள்" என்றாள்.

சுப்புவும் "அந்த மந்திரம் என்ன வென்று தெரியுமா?" என்று ஆவலு டன் கேட்டான். கமலாவும் "உங்களுக் குத்தான் இதிலெல்லாம் நம்பிக்கை இல்லையே. உங்களுக்கு எதற்கு அந்த மந்திரம்?" என்று கேட்டாள். அதற்கு சுப்பு "யார் யாருக்கு எப்படி யெல்லாம் அதிர்ஷ்டம் அடிக்குமோ, யார் கண்டார்கள்?" என்றான்.

கமலாவும் "சரி. இப்போதே போய் அதைத் தெரிந்து கொண்டு வந்து சொல்கிறேன்" என்று கூறிச் சென்றாள். சற்று நேரத்தில் திரும்பி வந்து அவள் "நிறைய பசுமாட்டுச் சாணம் சேகரித்து விறட்டிகளாகத் தட்ட வேண்டும். அதைக் கொண்டு ஹோமம் செய்து அந்த சாம்பலை எடுத்து உடம்பின் மீது பூசிக் கொண்டு காவேரி ஆற்றில் குளித்து விட்டு வந்து இந்த மந்திரத்தை உச் சரிக்க வேண்டும். அப்போது எவ் வளவு மாட்டுச் சாணத்தைத் தொடு கிறோமோ அவ்வளவும் தங்கமாகி விடும். இப்படித்தான் உலகத்துத் தங்கம் எல்லாம் உருவாகிறது என்று சீதா சொல்கிறாளே. இது உண் மையா?" என்று கேட்டாள்.

சுப்புவும் "நான் மாட்டுச் சாண விஷயத்தைக கவனித்துக் கொள் கிறேன். நீ கரிசலாங்கண்ணி விஷயத் தில் கவனம் செலுத்து. யார் முதலில் வெற்றி பெறுகிறாரோ அவரே மிக

ரெண்டு வருடங்களில் பயனடைய லாம். அதிர்ஷ்ட கட்டையானால் இரண்டாயிரத்து அறுநூற்று எண் பத்து எட்டு ஆண்டுகள் கூட ஆக லாம். இதெல்லாம் அவரவருக்குத் தோன்றும் விதத்தில் செய்ய வேண் டியதாகும்" என்றான்.

சுப்புவும் "அந்த எட்டு சுலோகங் களை மட்டும் கூறுங்கள். நான் சரி யான வரிசையில் கொண்டு வரு கிறேன்" என்றான். எனவே சீதாவின் கணவனும் ஒரு ஓலைச் சுவடியி லிருந்து சுலோகங்களைக் குறித்துக் கொடுத்தான். சுப்பு அதை எடுத்துக் கொண்டு வீட்டை அடைந்த போது கமலா "அத்தான்! மந்திரத்தால் மாட் டுச் சாணத்தைத் தங்கமாக்கி விட

வும் புத்திசாலி எனக் கொள்ளலாம்" என்றான்.

அப்போது கமலா "இந்த மாதிரி வேலைகளில் ஈடுபட்டு நேரத்தை வீணாக்குவதற்கு நான் என்ன முட்டாளா?" என்றாள். சுப்புவும் "நீதான் இவற்றிலெல்லாம் நம்பிக்கை கொண்டிருக்கிறாயே. அப்படியானால் செயலில் இறங்க வேண்டியதுதானே" என்றான்.

அப்போது கமலா "இதையெல்லாம் நம்புவதால் எனக்கு எவ்வித நஷ்டமும் இல்லை. அதனால் நம்புகிறேன். இவற்றின்படி நடந்தால் எனக்கு நஷ்டம்தான். லாபம் எதுவும் இல்லை. இதுவரை என்னிடம் யார் யாரோ ஏதேதோ சொன்னார்கள். அவர்கள் அப்படிச் சொல்லக் காரணம் அவற்றை எல்லாம் நான் நம்புகிறேன் என்பதே. ஆனால் நம்புவதோடு சரி. அவற்றின்படி நான் நடப்பதில்லை. அவை பற்றி யோசிப்பதும் இல்லை. நான் என் நேரத்தின் பெரும்பகுதியை புத்தகங்களைப் படிப்பதில் கழிக்கிறேன்" என்றாள்.

அதுகேட்டு சுப்பு தன்னைவிட கமலா புத்திசாலி எனத் தெரிந்து கொண்டான். "உன்னைவிட புத்திசாலி நான் என நினைத்து வந்தேன். சீதரவின் கணவன் கூறியதைக் கேட்டு நேரத்தை வீணாக்கினேன். யாராவது எதையாவது சொன்னால் அதைக் கேட்டுக் கொள்ளலாம். அது தவறென வாதம் புரிவதோ அல்லது அதன்படி நடப்பதோ வீண். உன்னைவிட எனக்கு அறிவு குறைவு என ஒப்புக் கொள்கிறேன். இனி நான் உன்னை மணக்கத் தயார். உனக்கு சம்மதமா?" என்று கேட்டான்.

கமலாவும் "நீங்கள் சொல்வதை நம்புகிறேன். உடனேயே பதில் சொல்லா விட்டாலும் விரைவில் என் தந்தை இதற்கு பதிலளிப்பார்" என்றாள். அப்போதுதான் சுப்புவுக்கு தன்னிடம் மாமா ஏன் சவால் விட்டார் என்பது புரிந்தது. புத்திசாலியான மனைவி கிடைக்கிறாளே என்று அவன் மகிழ்ச்சி அடைந்தான்.





# யாருக்கு சகுனம்

இந்திரபுரியை இந்துவர்மன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவன் மாதமொரு முறை காட்டிற்கு போய்க் கொடிய மிருகங்களை வேட்டையாடுவது வழக்கம். ஆனால் ஒரு முறை தொடர்ந்தாற் போல் ஆறு மாதங்களுக்கு வேட்டையாடப் போக முடியவில்லை. காரணம் அரசாங்க அலுவல்களில் மூழ்கி விட்டது தான்.

இனி அதிக வேலை இல்லை எனக் கண்டு அவன் ஒரு நல்ல நாளாகப் பார்த்து வேட்டைக்கு கிளம்பினான். அவன் தன் பரிவாரங்களோடு கோட்டை வாசலுக்கு வந்த போது எதிரே ஒரு விறகு வெட்டி கோடாலியும் கையுமாக வருவதைக் கண்டான்.

இந்துவர்மன் அவனை நிறுத்தி "அட அறிவற்றவனே! வெகு நாட்களுக்குப் பிறகு ஒரு நல்ல நாள் பார்த்து நான் வேட்டைக்குக் கிளம்பும் போது அபசகுனமாக நீ எதிரே வருகிறாயே. இன்று மட்டும் என் வேட்டை நல்லவிதமாக நடக்காவிட்டால் நான் திரும்பி வந்து உன் தோலை உரித்து விடுவேன்" என்று எச்சரித்து விட்டுப் போனான்.

அந்த விறகு வெட்டியின் பெயர் கட்டையன். அவன் அன்று தான் மன்னனுக்கு எதிராக வந்து அபசகுனமானது தலைவிதியே என்று தன்னைத்தானே நொந்து கொண்டான். மன்னனுக்கு அன்று வேட்டையாடப் பல மிருகங்கள் கிடைக்க வேண்டுமென்று அவன் கடவுளை வேண்டிக் கொண்டான்.

அன்று இந்துவர்மனுக்கு வேட்டையில் பல மிருகங்கள் கிடைத்தன. ஒரு சிங்கம், நான்கு புலிகள், சில காட்டுப் பன்றிகள் என்று பலவற்றை மன்னன் அடித்துக்கொன்றான். இது

-வி. குரு மூர்த்தி-

தன் முன் விறகு வெட்டி எதிரே வந்த சகுனத்தால் ஏற்பட்ட நற்பலன் என அவன் மகிழ்ந்தான்.

வேட்டையிலிருந்து திரும்பிச் சென்ற இந்துவர்மன் கட்டையனை அழைத்து வரச் சொல்லி அவன் வந்ததும் "நான் வேட்டைக்குப் போகும்போது உன்னைப் பார்த்த தால்தான் எனக்கு வேட்டையில் பல மிருகங்கள் கிடைத்தன. நீ காட்டிற்குப் போனாயே, உனக்கு என்ன கிடைத்தது?" எனக் கேட்டான்.

கட்டையனும் "அரசே! நேற்று உங்களை முதலில் நான் கண்டதால் பெரிய பெரிய மரங்களை என் கோடாலி அநாயாசமாக வெட்டி வீழ்த்தியது. இதனால் எனக்கு தினமும் கிடைக்கும் பணத்தை விட இரு மடங்கு அதிகமாகக் கிடைத்தது. நாங்கள் தங்களை வாழ்த்திக் கொண்டு நேற்றிரவு வயிறு நிறைய உண்டோம்" என்றான்.

இதுகேட்டு மகிழ்ந்த மன்னன் ஏதோ சொல்லப் போகையில் ராஜ வைத்தியர் எழுந்து "அரசே! இவன் சொல்வது முழுப் பொய். நேற்று இவன் மயக்கமுற்றுக் காட்டில் விழுந்து கிடக்கவே பச்சிலை பறிக்கச் சென்ற நான் இவனுக்குச் சிகிச்சை அளித்து இவன் உயிரைக் காப் பாற்றினேன்" என்றார்.

அதைக் கேட்டு இந்துவர்மன் கோபத்தோடு "அடே! என் முன் பொய்யா சொன்னாய்? நீ உண்மை யில் நடந்ததைச் சொல்லப் போகி றாயா அல்லது உன் தோலை உரிக்



கட்டுமா?" என்று கத்தினான். அது கேட்டு கட்டையன் நடுநடுங்கியவாறே கூறலானான்.

"நான் விறகு வெட்டக் காட்டிற்குப் போனதும் நீங்கள் எச்சரித்தது பற்றியே யோசித்துக் கொண்டிருந்தேன். அப்படியே ஒரு மரத்தை வெட்டப் போனேன். அதனருகே இருந்த புற்றை கவனியாமல் நான் மிதித்து விட்டேன். அதிலிருந்த விஷப் பாம்பு என்னைத் தீண்டிவிட்டது. நான் மயக்கமுற்று நினைவிழந்து விட்டேன்.

அப்போது பச்சிலைப் பறிக்க வந்த ராஜ வைத்தியர் அங்கு கிடைத்த பச்சிலைகளைக் கொண்டு சிகிச்சை செய்தார். அவர் என் உடலில் ஏறிய விஷத்தைப் போக்கி என்னை ஓரிடத்தில் உட்கார வைத்து விட்டுச் சென்றார். நான் மாலையான போது எழுந்து மெதுவாக நடந்து வந்து என் குடிசையை அடைந்தேன்."

இவ்வாறு கட்டையன் கூறியதைக் கேட்ட மன்னன் "அடடா! என்னை நீ முதலில் இன்று பார்த்ததாலா இப்படி எல்லாம் நடந்தது? இவ்வளவு நடந்தும் நீ மகிழ்ச்சியுடன் இருப்பதாக ஏன் பொய் பேசினாய்?" என்று கேட்டான்.

அப்போது கட்டையன் "இன்று உங்களைப் பார்த்ததால்தானே காட்டில் என்னைப் பாம்பு கடித்தும் கூட ராஜ வைத்தியரிடம் சிகிச்சை பெறும் பாக்கியம் பெற்றேன். இதனால் கெட்டதைச் சொல்லி உங்கள் மனதை நோகச் செய்ய வேண்டாம் என்றே மகிழ்ச்சியாக இருப்பதாகக் கூறினேன்" என்று கூறினான்.

அதுகேட்டு இந்துவர்மன் தன் மனத்துள் "இவன் என்னை பார்த்ததால்தான் பாம்பு கடித்தது என்று குற்றம் சாட்டாமல் என்னால் அவனுக்குப் பெரும் பாக்கியம் கிடைத்ததாகக் கூறி எப்படித் திருப்பி விட்டான்" என்று எண்ணி அவனுக்கு நூறு பொற்காசுகளைப் பரிசாக அளித்ததோடு அவனைத் தன் அரண்மனையில் வேலைக்கும் அமர்த்திக் கொண்டான்.






துஷ்யந்தனுக்குப் பிறகு பரதன் நாட்டின் மன்னனானான். அவன் கண்வ மகரிஷியை ஆஸ்தான புரோகிதராகக் கொண்டு நன்கு ஆட்சி புரிந்தான். அவனது கொள்ளுப் பேரன் ஹஸ்தி. இவனது பெயரில்தான் ஹஸ்தினாபுரம் நிறுவப்பட்டது. இந்த ஹஸ்தியின் ஐந்தாவது தலைமுறையில் வந்தவன் குரு. இவன் பெயரில் குருக்ஷேத்திரம் ஏற்பட்டது. குருவின் ஏழாவது தலைமுறையில் வந்தவன் பிரதீபன்.

பிரதீபனின் மனைவி சிபியின் மகளான சுநந்தை. இவர்களுக்குப் பிறந்தவர்கள் தேவாபி, சந்தனு என்ற இரு மைந்தர்கள். இவர்களில் தேவாபி தவம் செய்யக் கானகம் சென்றுவிடவே அவனது தம்பி சந்தனு நாட்டின் மன்னனானான்.

ஒருமுறை சந்தனு வேட்டையாடியவாறே கங்கை நதிக் கரையை அடைந்தபோது அங்கு ஒரு அழகிய பெண்ணைக் கண்டான். அவள் தேவலோகப் பெண்ணோ என எண்ணி அவன் மயங்கி நிற்கையில் அந்தப் பெண்ணும் அவனைப் பார்த்துப் புன்னகை புரிந்தாள். இருவரும் ஒருவரையொருவர் விரும்புவதை உணர்ந்தார்கள்.

சந்தனு அவளை அணுகி "அழகியே! நீ யார்? தனியாக இங்கு ஏன் நின்று கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டான். அப்போது அவள் "நீங்கள் என்னை மணக்க விரும்புவது தெரிகிறது. ஆனால் நான் ஒரு நிபந்தனையின் பேரில்தான் உன்னை



மணப்பேன், நமது விவாகம் ஆனபின் நான் எதைச் செய்தாலும் நீங்கள் தடுக்கக்கூடாது. அதற்காக என்னைத் தடுத்தாலோ, கடிந்து கொண்டாலோ உங்களை விட்டுப் போய் விடுவேன். இதற்கு சம்மதாமா?" என்று கேட்டாள். சந்தனுவும் அதற்குச் சம்மதித்து அவளை மணந்து கொண்டான்.

அவர்களுக்கு வரிசையாக ஆண் குழந்தைகளாகப் பிறக்கலாயின. குழந்தை பிறந்ததும் சந்தனுவின் மனைவி அதனை கங்கை நதியில் எறிந்து வரலானாள். இப்படியாக அவள் தான் பெற்ற ஏழு ஆண் குழந்தைகளை கங்கையில் எறிந்ததும் சந்தனு அச்செயல் பற்றி மனம் புழுங்கினானேயல்லாது எதிர்த்து ஒரு வார்த்தை கூடப் பேசவில்லை. அதற்குக் காரணம் எங்கே அந்த அழகி தன்னை விட்டுப் பிரிந்து போய் விடுவாளோ என்று அவன் பயந்தது தான்.

ஆனால் அவள் தான் பெற்ற எட்டாவது குழந்தையைக் கங்கையில் எரியப் போனபோது சந்தனு அவளைத் தடுத்து "இனியும் உன் அடாத செயலை நான் பொறுக்க மாட்டேன். நீ பெண்தானா? நீ பெற்ற குழந்தையையே சாகடிக்கிறாயே. இந்த ஒரு குழந்தையாவது உயிர் வாழட்டும்" என்றான்.

அவளும் "ஆம். வாழட்டும். நான் வந்த வேலையும் முடிந்தது. இனி நான் போகிறேன்" என்றாள். சந்தனுவும் "உண்மையில் நீ யார்? ஏன் இப்படிச் செய்து வந்தாய்?" என்று கேட்டான். அவளும் தன்னைப் பற்றிக் கூறலானாள்.

"நான் கங்காதேவி. எனக்குப் பிறந்த எட்டு குழந்தைகளும் அஷ்ட வசுக்கள். அவர்கள் வசிஷ்டரின் சாபத்தால் மானிடப் பிறவி எடுக்க வேண்டியதாயிற்று. அவர்களது சாபத்தைப் போக்கவே நான் மானிடப் பெண்ணாக வந்து உங்களை மணந்து அவர்களைக் குழந்தைகளாகப் பெற்று உடனேயே கங்கையில் எறிந்து ஏழு பேர்களின் சாபத்தைப் போக்கினேன். எட்டாவது வசு கொஞ்ச காலம் பூலோகத்தில் இருக்க

வேண்டும் என்பதால் விதி உங்களைக் கொண்டு என்னைத் தடுத்து இவனை வாழ வைக்கிறது. நான் இவனை வளர்த்து கல்வி அளித்துப் பெரியவனாக்கி உங்களிடம் சேர்க்கிறேன். இப்போது என் நிபந்தனை படி உங்களை விட்டு பிரிந்து போகிறேன்."

இவ்வாறு கூறி கங்கை தான் பெற்ற குழந்தையோடு மாயமாய் மறைந்து போனாள். மனைவியையும் மகனையும் இழந்த சந்தனு கவலைப் பட்டவாறே தன் நாட்களைக் கழித்து வந்தான். இப்படியாகச் சில ஆண்டுகள் கழிந்தன.

ஒருநாள் கங்கை கரைக்குச் சென்ற சந்தனு திடீரென ஆற்றின் நீர் குறைந்து கொண்டே போவது கண்டு ஆச்சரியப்பட்டு அதற்கு என்ன காரணம் என்று சுற்றிலும் பார்த்தான். சற்று தூரத்தில் ஒரு வாலிபன் அம்புகளால் அணை கட்டி ஆற்றின் நீரோட்டத்தைத் தடுத்துக் கொண்டிருப்பதைப் பார்த்தான்.

அப்போது கங்காதேவி சந்தனு முன் வந்து "இவன்தான் உங்கள் மைந்தன். இவனை நன்கு வளர்த்துப் பெரியவனாக்கி விட்டேன். இவன் வசிஷ்டரிடம் வேதங்களையெல்லாம் கற்றிருக்கிறான். பரசுராமரிடம் வில் வித்தை கற்றான். இவன் பெயர் தேவவிரதன். இனி நீங்கள் இவனை உங்களோடு அழைத்துச் செல்லலாம்" எனக் கூறி அந்த வாலிபனைச் சந்தனுவிடம் ஒப்படைத்தாள். சந்தனுவும் தேவவிரதனைத் தன்னோடு





அழைத்துப் போய் அவனுக்கு இளவரசுப் பட்டம் கட்டினான்.

நான்கு ஆண்டுகள் கழிந்தன. ஒரு நாள் சந்தனு யமுனை நதிக்கரையோரம் போய்க் கொண்டிருக்கையில் எங்கிருந்தோ நறுமணம் வீசுவதை உணர்ந்தான். அத்திசையில் அவன் சென்று அந்த வாசனை ஒரு அழகிய பெண்ணிடமிருந்து வருகிறது என்று தெரிந்து கொண்டான்.

சந்தனு அவளை அணுகி "பெண்ணே! நீ யார்? உன் தந்தை எங்கே இருக்கிறார்?" என்று கேட்டான். அவளும் "நான் மீனவ மன்னன் மகள். என் பெயர் மச்சகந்தி. என்னை யோஜனகந்தி என்றும் அழைக்கிறார்கள். என் தந்தையின் கட்டளைப்படி படகு ஓட்டி பயணிகளைக் கரை சேர்க்கிறேன்" என்றாள்.

சந்தனு உடனே மீனவ மன்னனைக் கண்டு "உன் மகளை எனக்கு மணம் செய்து வைக்கிறாயா?" என்று கேட்டான். அம்மன்னனும் "உங்களை என் மாப்பிள்ளையாக அடைய நான் மிகவும் கொடுத்து வைத்தவன். ஆனால் ஒன்று சொல்லிவிட விரும்புகிறேன். என் மகளுக்குப் பிறக்கும் பிள்ளைதான் உங்களுக்கு பின் அரசனாக வேண்டும். இதற்குச் சம்மதித்தால் உங்களுக்கு என் மகளை விவாகம் செய்து வைக்கிறேன்" என்றான்.

தேவவிரதன் இளவரசனாகப் பட்டம் கட்டப்பட்டதால் இந்த நிபந்தனையை ஏற்க இயலாமல் சந்தனு ஹஸ்தினாபுரத்திற்குத் திரும்பிச் சென்றான். ஆனால் அவன் மனமோ மச்சகந்தியை மணந்து கொள்ள முடியவில்லையே என்று ஏங்கியது.

தன் தந்தை எதற்கோ கவலைப்படுவதைக் கண்ட தேவவிரதன் அதன் காரணம் என்ன என்று கேட்டான். சந்தனுவும் மீனவ மன்னன் கூறியதையும் மச்சகந்தியைப் பற்றியும் சொன்னான். தேவவிரதன் உடனே தன் பரிவாரங்களோடு கிளம்பிப் போய் மீனவ மன்னனைக் கண்டான். அவனிடம் "நீ உன் மகளை என் தந்தைக்கு மணமுடித்துக் கொடு" என்று கேட்டான்.

அம்மன்னனும் "அவள் உண்மையில் உபரிவசுவின் மகள். அவர்

இவளை என்னிடம் ஒப்படைத்து இவளுக்கு ஏற்றவனை மணம் செய்து வைக்கச் சொன்னார். இவள் பெயர் சத்தியவதி. உங்கள் தந்தையிடம் கூறிய நிபந்தனைபடி இவளை நான் மணம் செய்து கொடுக்கச் சித்தமாக இருக்கிறேன்" என்றான்.

தேவவிரதனும் "உன் பேச்சிலிருந்து நீ ஏதோ சந்தேகப்படுகிறாய் என்று தெரிகிறது. என் தந்தைக்குப் பின் நான் அரசனாக மாட்டேன். சத்தியவதிக்குப் பிறக்கும் குழந்தையே நாடாளும் உரிமை பெறுவான். இதற்கு நான் சத்தியம் செய்து கொடுக்கிறேன்" என்றான் எல்லோரும் கேட்கும்படியாக.

அப்போது அம்மன்னன் "இந்த மாதிரி யாராலும் சத்தியம் செய்ய முடியாதுதான். நீங்கள் நாடு வேண்டாம் என்றாலும் உங்களுக்குப் பிறக்கப் போகும் குழந்தைகள் பேசாமல் இருப்பார்களா?" என்று கேட்டான். தேவவிரதனும் "ஐயா! எனக்கு நாடு வேண்டாம் என்று சத்தியம் செய்தேன். என் குழந்தைகள் உரிமை கொண்டாடுவார்களோ என்ற பயமும் உங்களுக்கு வேண்டாம். நான் விவாகமே செய்து கொள்ளப் போவதில்லை. பிரம்மச்சாரியாகவே வாழ்நாள் முழுவதும் இருப்பேன். இது சத்தியம். இனி நீங்கள் தயங்காமல் உங்கள் மகளை என் தந்தைக்கு விவாகம் செய்து வைக்கலாம்" என்றான்.

அம்மன்னனும் திருப்தி அடைந்து



தன் மகளை சந்தனுவுக்கு மணம் செய்து வைத்தான். தேவவிரதன் இவ்வாறு பயங்கரமான சத்தியங்களை செய்ததால் அவனுக்கு பீஷ்மன் என்ற பெயர் ஏற்பட்டது. பீஷ்மம் என்றால் பயங்கரம் என்று பொருள்.

சந்தனுவுக்கும் சத்தியவதிக்கும் சித்திராங்கதன், விசித்திரவீரியன் என் இரு புதல்வர்கள் பிறந்தார்கள். இவர்கள் குழந்தைகளாக இருக்கும்போதே சந்தனு இறந்து போனான். பீஷ்மர் தம் தந்தையின் ஈமச் சடங்குகளைச் செய்து விட்டு சத்தியவதியின் மூத்த மகனான சித்திராங்கதனுக்கு பட்டாபிஷேகம் செய்தார்.

சித்திராங்கதன் மிகுந்த பலசாலி. ஒருமுறை சித்திராங்கன் என்ற



கந்தர்வனோடு சித்திராங்கதன் போர் புரிந்து இறந்து போனான்.

பீஷ்மர் சித்திராங்கதன் இறந்த தற்காக மிகவும் மனம் வருந்தினார். அவர் விசித்திரவீரியனை நாட்டின் மன்னனாக்கினார். விசித்திரவீரியனோ சிறுவனாக இருந்ததால் பீஷ்மரே ஆட்சியை கவனித்து வரவேண்டும் என்று சத்தியவதி கேட்டுக் கொண்டாள். அவரும் அவன் வயதிற்கு வரும் வரை அப்பொறுப்பை ஏற்பதாக கூறினார்.

விசித்திரவீரியன் வளர்ந்து விவாக வயதை அடைந்தான். அச்சமயத்தில் காசி மன்னன் தன் மூன்று புதல்விகளான அம்பை, அம்பிகை, அம்பாலிகை ஆகிய மூவருக்கும் சுயம்வரம் நடத்தப் போவதாக அறிவித்தான்.

பீஷ்மர் இந்த சுயம்வரம் பற்றி சத்தியவதியிடம் கூறித் தம் ரதத்தில் ஏறி அமர்ந்து காசி நகருக்குச் சென்றார். சுயம்வரத்திற்கு பல மன்னர்களும் அரசகுமாரர்களும் வந்திருந்தார்கள். காசி மன்னன் தன் புதல்விகளிடம் அவர்களைப் பற்றிக் கூறிக் கொண்டிருக்கையில் பீஷ்மர் எழுந்து வந்து "நான் இந்த மூன்று அரசகுமாரிகளையும் என் தம்பி விசித்திர வீரியனுக்கு மணமுடித்து வைக்க என் தேரில் அழைத்துச் செல்லப் போகிறேன். என்னோடு போர் புரிந்து அவர்களை விடுவிக்க யாராவது இருந்தால் அவ்வாறு செய்யலாம்" என்றார்.

எல்லோருமே பீஷ்மரைத் தாக்கலாயினர். ஆனால் பீஷ்மரை அவர்களால் ஒன்றும் செய்ய முடியவில்லை. சிலர் படுகாயமுற்று ஓடினர். அது கண்டு மற்றவர்களும் பயந்து ஓடிப் போயினர். அப்போதும் சால்வன் என்ற மன்னன் பீஷ்மரை எதிர்க்க வந்தான். அவர் அவனையும் புறமுதுகு காட்டி ஓடச் செய்துவிட்டு மூன்று அரசகுமாரிகளுடன் ஹஸ்தினாபுரத்தை அடைந்தார்.

அவர் சத்தியவதியிடம் அந்த மூன்று அரசகுமாரிகளையும் ஒப்படைத்து இனி அவர்களை விசித்திர வீரியனுக்கு விவாகம் செய்து வைக்கலாம் எனக் கூறினார். அப்போது

அவர்களில் மூத்தவளான அம்பை "நான் இதற்கு முன்பே சால்வ மன்னரை என் கணவராக மனதில் வரித்து விட்டேன். அவரும் என்னை மனதார நேசிக்கிறார். சுயம்வரம் மட்டும் ஒழுங்காக நடந்திருந்தால் நான் அவர் கழுத்தில்தான் மாலை போட்டிருப்பேன். ஆனால் அபலை யான நான் என்ன செய்யமுடியும்? நான் என் விருப்பத்தை கூறி விட்டேன். அதை நீங்கள் நிறைவேற்றி வைப்பதுதான் நியாயம்" என்றாள்.

பீஷ்மர் பெரியவர்களையும் அமைச்சர்களையும் புரோகிதர்களையும் கலந்து ஆலோசித்துவிட்டு அவர்களது அனுமதி பெற்று அம்பையை சால்வனிடம் அனுப்பிவிட்டு மற்ற இருவரையும் விசித்திரவீரியனுக்கு மணமுடித்து வைத்தார்.

மணமானதும் விசித்திரவீரியன் ஆட்சி பற்றிக் கவலைப்படாமல் தன் இரு மனைவிகளுடன் சுகமாக காலம் கழிக்கலானான். அவனைச் சில நாட்களில் க்ஷயரோகம் என்ற எலும்புருக்கி நோய் பற்றிக் கொண்டது. அதனால் அவன் விரைவிலேயே இறந்து விட்டான்.

பீஷ்மர் அவனுக்கு ஈமச் சடங்குகளைச் செய்து விட்டு சத்தியவதிக்கு ஆறுதல் கூறினார். சில மாதங்களானதும் சத்தியவதி பீஷ்மரிடம் "மகனே! உன் தந்தையின் வம்சம் நிலைத்திருக்க யாராவது ஒரு பெண்ணை நீ மணந்து கொண்டு நம் வம்சம் அழியாமலிருக்கச் செய்யலாம்" என்றாள்.

பீஷ்மர் அவள் கூறியதை ஏற்காமல் "நான் ஒருபோதும் என் முடிவை மாற்றிக் கொள்ளமாட்டேன். வம்சம் அழியாதிருக்க உன் மருமகள்கள் உத்தம உயர் ஜாதிக்காரர்கள் வாயிலாகக் குழந்தைகளைப் பெறலாம். முன்பு பரசுராமர் க்ஷத்திரிய மன்னர்களைப் பூண்டோடு அழித்தபோது அவர்களது மனைவிகள் இந்த வழியைக் கடைப்பிடித்து தம் வம்சங்கள் அழியாமல் பார்த்துக் கொண்டார்கள். எனவே நாமும் அவ்வழியைப் பின்பற்றுவோம்" என்றார்.



# சொர்க்கத்தில் குதிரைப்படையா!

மாளவ மன்னன் மணிவர்மனுக்கு மகாபாரதம் கேட்பதென்றால் சலிப்பே ஏற்படாது. பாரதக் கதையை யார் எப்படிச் சொன்னாலும் அவர்களுக்கு அவன் ஏதாவது பரிசளிப்பான்.

ஒருமுறை மணிவர்மன் ஒருநாள் மாலையில் தன் கிழக் குதிரை மீதமர்ந்து தன் பூங்காவில் சுற்றி வந்து கொண்டிருந்தான். அப்போது விகடகவி அவனுக்குப் பாண்டவர்கள் சொர்க்கம் அடைந்த கதையைச் சொல்லிக் கொண்டிருந்தான்.

கதை முடிந்ததும் மன்னன் தன் கிழக் குதிரையை விகடகவிக்குப் பரிசாக அளித்தான். இரண்டு நாட்களுக்குப் பின் விகடகவி நடந்தே வருவதைக் கண்ட மன்னன் "நான் கொடுத்தக் குதிரை இருக்க, ஏன் நடந்து வருகிறாய்?" என்று கேட்டான்.

விகடகவியும் "பாண்டவர்கள் சொர்க்கம் போன கதையை அன்று தங்களோடு அதுவும் கேட்டதா? அதனால் அது பாண்டவர்களின் குதிரைப் படையில் சேரப் பிடிவாதம் பிடித்து சொர்க்கத்திற்குப் போய் விட்டது" என்றான்.

அதுகேட்டு மன்னன் விகடகவிக்குத் தான் கொடுத்த கிழக் குதிரை எவ்விதத்திலும் பயன்படாதது என்பதைக் குறிப்பால் உணர்த்துகிறான் எனப் புரிந்து கொண்டான். அவன் அப்போதே ஒரு உயர் ரகக் குதிரையைத் தேர்ந்தெடுத்து விகடகவிக்குக் கொடுத்தான்.





# துள்ளினமாடு!

வெற்றியூரில் கோவிந்தய்யா என்ற பண்டிதர் இருந்தார். அவருக்குத் தன்னைவிட யாரும் அறிவாளி இல்லை என்ற மண்டைக் கர்வம் இருந்தது. அவர் பழைய நூல்களை புரட்டிப் பார்த்து அவற்றிலுள்ள குற்றங் குறைகளை மட்டும் எடுத்துக் கொண்டு அவற்றை விவரிப்பதையே வேலையாகக் கொண்டிருந்தார்.

அவரைக் கண்டு பண்டிதர்கள் நடுங்கினார்கள். அவர் பல ஊர்களுக்கும் போய் வாதம் புரிந்து அங்குள்ள பண்டிதர்களை பிரமிக்க வைத்தவாறே ஏலகிரி நாட்டை அடைந்தார்.

அங்கு தலைநகரில் மன்னன் ஏகாம்பரநாதனைக் கண்டுதான் அந்நாட்டுப் பண்டிதர்களை வாதம் புரிந்து தோற்கடிக்க வந்திருப்பதாகக் கூறவே மன்னனும் பண்டிதர்களின் சபையைக் கூட்டினான். கோவிந்தய்யா எந்த விஷயத்திலும் தாம் புரிந்து கொண்ட பொருளல்லாது வேறு பொருள் கூறவே பண்டிதர்கள் வியப்பும் அடைந்து மறுபேச்சுப் பேச முடியாது நின்றார்கள்.

கோவிந்தய்யாவோ கர்வத்தோடு சுற்றிலும் ஒருமுறை பார்த்து சிரித்தார். மன்னனோ அவரை வெல்ல ஒரு பண்டிதர் தன் நாட்டில் இல்லையே என்று எண்ணி அவமானத்தால் தலை குனிந்து கொண்டான். அப்போது அரசாங்க விதூஷகன் விநோத சந்திரன் கோவிந்தய்யாவை மட்டம் தட்ட யோசிக்கலானான்.

கோவிந்தய்யா தம் புலமையை மேலும் வெளிப்படுத்துவது போல் "நீங்களெல்லாம் ""சர்வே ஜனா சுகினோ பவந்து" என்று பல அறிஞர்களும் பண்டிதர்களும் சொல்வதைக் கேட்டிருப்பீர்கள். அவர்கள் அதைத் தவறாகச் சொல்கிறார்கள். அதைச்

-எஸ். சோபினி-

சரியாகச் சொல்ல வேண்டுமென்றால் "சர்வே சாது ஜனா சுகினோ பவந்து" என்பதைத்தான் கூற வேண்டும். சர்வே ஜனா என்றால் எல்லா மக்கள் என்று பொருள். சுகினோ பவந்து என்றால் சுகமாக இருக்கட்டும் என்று பொருள். எல்லா மக்கள் என்றால் அதில் திருடர்கள், போக்கிரிகள், கொலையாளிகள், ஏமாற்றுபவர்கள் என்பவர்களெல்லாம் அடங்கியவர்கள் தாமே. இவர்களும் சுகமாக இருக்க வேண்டும் என்றால் உலகில் திருட்டு, கொலை, பொய், புரட்டு, சூது, வாது போன்றவை இருந்து கொண்டே இருக்க வேண்டும் என்றல்லவா ஆகிவிடும். எனவேதான் 'சாது ஜனா' அதாவது நல்லவர்கள் என்று பொருள்தரும் சொல் இருக்க வேண்டும் என்று கூறுகிறேன்" என்றார்.

பண்டிதர்கள் 'திருதிரு'வென்று விழித்தார்கள். அப்போது விகடகவி எழுந்து "ஐயா! மகாகனம் பொருந்திய பண்டிதரே! நீர் சொல்வது தவறு" என்றான். அதுகேட்டு கோவிந்தய்யாவின் முகம் சிவந்தது. பற்களை 'நற நற' வெனக் கடித்துக் கொண்டு "தவறா? எப்படி தம்பீ!" என்று கண்களை உருட்டியவாறே கேட்டார்.

விகடகவி "ஐயா! 'சர்வே ஜனா சுகினோ பவந்து' என்பது நூற்றுக் கணக்கான வருடங்களாக யாவராலும் சொல்லப்பட்டு வருவது. பண்டிதர்கள், அறிஞர்கள் யாவரும் தம் அனுபவ ஞானத்தால் இதனைச் சிறந்ததாக ஏற்று வந்திருக்கிறார்



கள். சுகம் என்றால் என்ன என்று உமக்குத் தெரியுமா?" என்று கேட்டான்.

கோவிந்தய்யா அவனை விழுங்கி விடுபவர் போல முறைத்துப் பார்த்தார். விகடகவியோ சற்றும் சளைக்காமல் "உமக்குத் தெரியாது. நான் சொல்கிறேன். கேட்டுக் கொள்ளும். பணம் காசும் பகட்டான மாளிகையும் இருந்தாலே மனிதன் சுகம் பெற்று விடுவானா? இல்லை. சுகம் மனதால் உணரப்படுவது. ராட்சஸ குணம் படைத்த கொலையாளிகளும் திருடர்களும் சுகமாக இருக்கவே முடியாது. எந்த நிமிடத்திலும் தம்மைக் காவல் வீரர்கள் பிடித்து விடுவார்களோ என்று பயந்து கொண்டே இருப்பார்கள். அப்படிபட்டவர்கள் கூட சுகமாக இருக்க வேண்டும் என்று எண்ணுவது அவர்கள் தம் கொடிய இழிசெயல்களை விட்டொழித்து நல் வழியில் சென்று சுகம் காணட்டும் என்பதற்கே. இதுதான் 'சர்வே ஜனா சுகினோ பவந்து' என்பதன் பொருள். எனவே எவன் மனதில் திருப்தி உள்ளதோ அவன் சுகப்படுவான்" என்றான்.

இந்த விளக்கம் கேட்டு பண்டிதர்களும் அங்கிருந்த மற்றவர்களும் கைதட்டி மகிழ்ச்சியையும் பாராட்டுதல்களையும் விகடகவிக்குத் தெரிவித்தார்கள். கோவிந்தய்யாவின் முகத்தில் ஈயாடவில்லை.

அதுகண்டு விகடகவி "ஐயா! நீர் மாபெரும் பண்டிதர் என்பதில் ஐயமில்லை. ஆனால் கர்வத்தால் விதண்டா வாதம் புரிகிறீர்கள். நீர் உலகிற்கு இலக்கியங்களிலுள்ள நல்ல விஷயங்களை எடுத்துக் கூறும். குறையையும் வேண்டத் தகாதவற்றை ஒதுக்கி விடும். இதுதான் நீர் செய்ய வேண்டிய நற்பணி" என்றான்.

கோவிந்தய்யா மறுபேச்சுப் பேசாமல் அங்கிருந்து தலைகுனிந்தவாறே எழுந்து சென்றார். அங்கிருந்த பண்டிதர்கள் விகடகவியை பாராட்டினார்கள். மன்னனும் அவனைப் பாராட்டிப் பரிசளித்தான்.



# அம்புலிமாமா செய்திகள்



## சிங்கத்தின் பிராயச்சித்தம்

சென்ற மே மாதம் குவெயிட்டிலுள்ள ஒரு நகருக்கு ஒரு சர்க்கஸ் கம்பெனி வந்தது. ஒருநாள் மாலைக் காட்சியில் 'சீஸர்' என்ற சிங்கம் வளையத்துள் வந்தது. அப்போது அதன் பயிற்சியாளர் எலினா அங்கே இருந்தாள். சிங்கம் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குத் தாவும்போது அது கீழே விழுந்து விட்டது. காட்சியைக் காண வந்த மக்கள் வழக்கம் போலக் கைதட்டாததால் சிங்கம் ஆத்திரம் கொண்டு தன் பயிற்சியாளர் மீது பாய்ந்து கழுத்தைக் கடித்தது. எலினா அப்போதே இறந்து போனாள். சிங்கம் அவளருகே சற்று நேரம் படுத்திருந்துவிட்டு பிறகு எழுந்து தன் கூண்டிற்குள் போயிற்று. அதன் பிறகு அது உணவே ஏற்கவில்லை. நீர் கூட அருந்தாமல் இருந்து இரண்டு வாரங்களுக்குப் பின் அது இறந்து போயிற்று. இதுபற்றிக் கூறிய சர்க்கஸ் நிர்வாகி "சிங்கம் சீஸர் தன் செய்கைக்கு வருந்தி பிராயச்சித்தமாக உயிர் விட்டது போலும்" என்றார்.



## முதலை பழி வாங்கியது!

ஆஸ்திரேலியாவில் ககாடு என்ற இடத்திலுள்ள தேசியப் பூங்கா முதலைகளுக்குப் பெயர் பெற்றது. அம்முதலைகளைக் காண மக்கள் கூட்டம் கூட்டமாகச் செல்வார்கள். அங்கு உண்ண முதலை மாமிசமும் கிடைக்கும். அங்கு சமையல்காரனாக இருந்த ராபர்ட் மினாஹன் என்பவன் முதலை மாமிச ருசி பற்றி வருபவர்களிடமெல்லாம் கூறி வந்தான். ஒருமுறை ஒரு ஆற்றில் அவன் நீந்திக் கொண்டிருந்த போது அவனை ஒரு முதலை பிடித்து விழுங்க முயன்றது. அப்போது அவனது நண்பன் ஒருவன் சட்டென அவனை இழுத்து ஒரு பாறை மீது கொண்டு போய்ச் சேர்த்தான். அவன் உடலிலெல்லாம் முதலை கடித்த காயங்கள் இருந்தன. தன் இனத்தவரைக் கொன்று சமைத்து அந்த மாமிசத்தைப் புகழும் அவன் மீது வஞ்சம் தீர்க்க அம்முதலை அவ்வாறு செய்தது போலும்!



# மனிதப் பிசாசுகள்

கேகய நாட்டில் ராஜபுரி என்ற சிறு கிராமம் இருந்தது. அதில் இருந்தவர்கள் ஏழைகளே. அவ்வூரின் மூன்று புறங்களில் பொட்டல் நிலங்களே இருந்தன. வடபுறம் மட்டும் சற்றுச் செழிப்பான நிலப் பகுதி இருந்தது. நீண்ட காலமாக அவ்வூருக்கு அதுதான் விளை நிலமாக இருந்து வேலையும் உணவும் அந்த ஊர்காரர்களுக்கு அளித்து வந்தது. ஆனால் பனி ரெண்டு ஆண்டுகளாக அங்கு பிசாசுகள் நடமாட்டம் இருப்பதாக எண்ணி ஊரார் பயந்து அங்கு போகாததால் அதில் முள்ளும் கள்ளியும் முளைத்து பயனற்றதாகியது.

அவர்கள் பயத்தை அதிகரிக்க இரவு வேளைகளில் பயங்கரக் கூச்சலும் தீவட்டிகள் நடமாட்டமும் இருக்கவே எல்லோரும் அங்கு கொள்ளிவாய்ப் பிசாசுகள் இருப்பதாக நம்பினார்கள். இரண்டொருவர் துணிந்து சென்றும் மறுநாள் அவர்களது உயிரற்ற உடல்கள்தான் கிடைத்தன. அதற்குப் பின் யாருமே அப்பகுதிக்குப் போகவில்லை.

அந்த கிராமத்திலிருந்து பார்த்திபன் என்ற இளைஞன் காசிக்குப் படிக்கச் சென்றிருந்தான். அவன் தன் படிப்பை முடித்துக் கொண்டு தன் ஊருக்கு வந்தான். அப்போது ஊர் இருந்த நிலையைப் பார்த்தான். பார்த்திபனுக்கு பேய் பிசாசுகள் என்பதில் நம்பிக்கை கிடையாது. மூட மக்கள் எப்படியோ பயந்து போய் அவை இருப்பதாக எண்ணி விடுகிறார்கள் என்பதே அவன் அபிப்பிராயம். அதனால் அவர்கள் பார்த்த கொள்ளிவாய்ப் பிசாசுகள் நடமாட்டத்திலும் பயங்கரக் கூச்சல்களிலும் ஏதோ மர்மம் இருப்பது அவனுக்குத் தெரிந்தது. அது என்ன என்று

-கி. வெங்கடாசலம்-

கண்டுபிடிக்க அவன் தீர்மானித்துக் கொண்டான்.

அவன் அன்றிரவு தன் வீட்டை விட்டு வெளியே வந்தான். தெருவில் ஜன நடமாட்டமே இல்லை. அவன் ஊரின் வடபுறம் நோக்கி நடந்தான். அங்கு தொலையிலுள்ள ஆலமரத்தின் பக்கம் வெள்ளையான ஒரு உருவம் ஆடிக் கொண்டிருப்பது தெரிந்தது. அதனருகே திடீரெனத் தீப்பற்றி எரிந்தது. அடுத்து ஒரு பயங்கரக் கூச்சல் கிளம்பியது.

பார்த்திபனுக்கு அது விசித்திரமாக தோன்றியது. எனவே அவன் தன் வீட்டிற்கு வந்து அதுபற்றி யோசித்து ஒரு முடிவுக்கு வந்தான். மறுநாள் அவன் மதிய உணவு உண்டு விட்டு ஒரு சில பொருள்களை மூட்டையாகக் கட்டி எடுத்துக் கொண்டு ஊராரிடம் தான் வேறு ஊருக்கு போகப் போவதாகக் கூறினான். அவர்களும் "இருட்டுவதற்கு முன்பே கிளம்பி அடுத்த ஊருக்குப் போய் விடு" என்று கூறினார்கள்.

பார்த்திபன் சூரியன் மேற்கில் மறையும் போது பிசாசுகள் நடமாடுவதாகக் கூறப்படும் இடத்தை அடைந்தான். அவன் தான் கொண்டு வந்த மூட்டையை எடுத்து அதிலிருந்த கருப்பு ஆடைகளை அணிந்து கொண்டான். அதன்பின் மரத்தின் மீதேறி ஒரு பெரிய அகலமான கிளை மீது அமர்ந்து எடுத்து வந்த உணவை உண்டு விட்டு பிசாசுகளின் வருகையை எதிர்பார்த்து விழித்திருந்தான்.





நள்ளிரவு வந்தது. அப்போது சில மனிதர்கள் அந்த ஆலமரத் தடியே வந்தார்கள். அவர்கள் அப் பகுதியை நன்கு அறிந்தவர்கள் போலத் தென்பட்டனர். அவர்கள் ஐந்து பேர்களே. அவர்கள் ஓரிடத்தில் தீ மூட்டி அதில் குங்கிலியப் பொடி யைப் போட்டார்கள். அது குப்பெனப் பற்றி எரிந்து சற்று நேரத்தில் அடங்கியது. அதற்குப் பின் அவர்கள் சமையல் செய்யலானார்கள்.

அப்போது அவர்களில் ஒருவன் நீண்ட கோலை எடுத்து அதில் வெள்ளைத் துணியைச் சுற்றி எடுத்து அப்படியும் இப்படியும் ஆட்டி னான். அப்போது வேறொருவன் நரி ஊளை இடுவது போல அவ்வப்போது கத்திக் கொண்டிருந் தான். இன்னொருவன் பயங்கரமாக உரக்கச் சிரித்தான். அதன்பின் அவர்கள் தீப்பந்தங்களை எடுத்துக் கொண்டு அங்குமிங்கும் ஓடினார் கள். இப்படியாக ஒரு மணி நேரம் கழிந்தது.

அப்போது இன்னமும் பத்து பேர்கள் வந்தார்கள். அவர்களது கைகளில் மூட்டைகள் இருந்தன. அவர்கள் ஒரு சிறு பாறையருகே போய் அதை நகர்த்தி விட்டு குழி தோண்டினார்கள். அந்த இடத்தில் பல மூட்டைகள் இருந்தன. அவற் றோடு தாம் கொண்டு வந்த மூட்டைகளையும் வைத்து மண்ணைப் போட்டு மூடி பாறையை நகர்த்தி முன்போல வைத்தார்கள். அதன் பிறகு சற்று நேரம் இருந்து தீவட்டிகளை எடுத்துக் கொண்டு ஓடியும் கத்தியும் ஆர்ப்பாட்டம் செய்தார்கள். விடிவதற்கு முன் அவர்கள் அங்கிருந்து சென்று விட்டார்கள்.

இவற்றை எல்லாம் மரத்தின் மீதிருந்தவாறே பார்த்திபன் பார்த் துக் கொண்டிருந்தான். அவர்கள் சென்ற பின் அவன் மரத்திலிருந்து கீழே இறங்கித் தன் ஊருக்குச் சென்றான்.

அவனைக் கண்ட ஊரார் "நீ அடுத்த ஊருக்குப்போய்விடப் போவ தாகச் சொன்னாயே. ஆனால் ஏன் திரும்பி வந்து விட்டாய்?" என்று

கேட்டார்கள். அவனும் "நான் எங்கும் போகவில்லை. அந்த பிசாசுகள் நடமாடும் இடத்தில்தான் இரவு முழுவதும் இருந்தேன். அவற்றையும் பார்த்தேன்" என்றான். "பிசாசுகளைப் பார்த்தாயா? அவை உன்னை உயிரோடு விட்டு விட்டனவா?" என்று அவர்கள் ஆச்சரியத்துடன் கேட்டார்கள்.

பார்த்திபனும் "அந்தப் பிசாசுகளும் பயப்படுபவையே. நாம் அவற்றைக் கண்டு பயப்படுவது போல அவையும் நம்மைப் பார்த்து பயப்படுகின்றன. நாளைக்கு நீங்கள் என் கூட வாருங்கள். ஒரு அதிசயத்தைப் பார்க்கலாம்" என்றான். அதுகேட்டு சிலர் "ஐயோ! பிசாசுகள் திரியும் இடத்திற்கா? நாங்கள் வரமாட்டோம்" என்று பயந்து கொண்டே கூறினார்கள். ஆனால் ஐந்தாறு இளைஞர்கள் அவனோடு வருவதாகத் துணிச்சலுடன் கூறினார்கள்.

பார்த்திபன் அவர்களை அழைத்துக் கொண்டு உச்சி வேளைக்கு அந்த ஆலமரத்தடிக்குச் சென்றான். அவர்களிடம் "இதுவரை நீங்கள் பிசாசுகள் என்று எண்ணியவை எல்லாம் திருடர்களே. அவர்கள் மொத்தம் பதினைந்து பேர்கள். இதுவரை இவர்கள் வெள்ளைத் துணியைக் கோலில் கட்டி உயரத் தூக்கி ஆட்டியும் பயங்கரமாகக் கத்தியும் நெருப்பை மூட்டியும் இங்கு கொள்ளி வாய்ப் பிசாசுகள் நடமாடுவதாக உங்களை எல்லாம் நம்ப வைத்திருக்கிறார்கள். அவர்கள் திருடர்கள். தாம்



திருடியவற்றை இங்கு ஒளித்து வைக்கவே இந்தப் பிசாசு நாடகம் ஆடுகிறார்கள்" என்று கூறிச் சிறிய பாறையைக் காட்டினான்.

அவர்களிடம் அவன் "இதை நகர்த்தி அந்த இடத்தில் நாம் தோண்டினால் நமக்கு அவர்கள் திருடிக் கொண்டு வந்த பொருள்களெல்லாம் கிடைக்கும்" என்றான். எல்லோரும் பாறையை நகர்த்தி விட்டுக் குழி தோண்டினார்கள். அக்குழியிலிருந்து அவர்களுக்கு நூறு மூட்டைகளுக்கு மேல் கிடைத்தன. அவற்றை எல்லாம் எடுத்துக் கொள்ளச் சொல்லி பார்த்திபன் தானும் சிலவற்றைச் சுமந்து கொண்டு அவர்களோடு தன் கிராமத்தை அடைந்தான்.

ஊராரிடம் அவன் எல்லாவற்றையும் விவரமாகக் கூறி "இந்த பனிரெண்டு ஆண்டுகளாக நம்மை பயமுறுத்தி வந்த இந்தத் திருடர்களைப் பிடிப்பதோடு அவர்கள் திருடிய இப்பொருள்களை அரசாங்கத்திடம் ஒப்படைத்து ஏதாவது பரிசு பெறலாம். இதற்குப் பின் அப்பகுதியை முன்போலாக்கிப் பயிரிட்டு சுகமாக இருப்போம்" என்றான்.

அன்று நள்ளிரவிற்குப் மேல் திருடர்கள் வந்து பாறையை நகர்த்திக் குழி தோண்டியபோது அதில் தாம் வைத்த பொருள்கள் எதுவுமே இல்லாதது கண்டு திகைத்து நின்றார்கள். அப்போது அவர்களை பார்த்திபனும் அவனது ஊராரும் சூழ்ந்து கொண்டு தடிகளால் அடித்து கட்டி இழுத்து மன்னன் முன் கொண்டு போய் நிறுத்தினார்கள். மன்னனும் பல நாட்களாகத் தேடப்பட்ட அத்திருடர்கள் கிடைத்தது கண்டு மகிழ்ந்தான். பார்த்திபனின் செயலைப் பாராட்டி அவனுக்கு நிறையப் பரிசளித்தான். அக்கிராமத்தவருக்கும் உடனடியாகத் தம் பசி தீர்த்துக் கொள்ள ஐந்து வண்டி தானியம் கொடுத்தான். அதன் பின் ராஜபுரிக்காரர்கள் தம் ஊரின் வடபுற நிலத்தைப் பண்படுத்தி உழுது பயிரிட்டுச் சுகவாழ்வு வாழ்ந்தார்கள்.



# இயற்கை விநோதங்கள்



## பெருங் கடல்யானை

சமுத்திரத்தில் வாழும் உயிரினங்களில் மிகப் பெரியது திமிங்கலம். ஆனால் சீல் என்ற நீர் வாழ் உயிரினத்தைத்தான் 'பெருங் கடல்யானை' என்கிறார்கள். அது பார்க்கப் பெரிய மீனைப் போல இருக்கும். சாதாரண சீல் மட்டுமல்லாது சாம்பல் நிற சீல், வளைய சீல் எனவும் உள்ளன. இவற்றின் நீளம் 6 மீட்டர் (20 அடிகள்) சுமார் நான்கு டன் நிறையுள்ளவை. இவை குஞ்சுகள் பொரிக்கக் கரைக்கு வருகின்றன.



## கிளைகளால் பாதுகாப்பு

பறவைகள் மரக் கிளைகள் மீது கூடுகளை கட்டுவது ஏன்? தம் குஞ்சுகள் பறக்க முடியாததால் அவற்றிற்குப் பாதுகாப்பு தேவை என அவை கருதி அவ்வாறு செய்கின்றன. பூனை போன்றவை மரங்களில் ஏறினாலும் அவற்றால் தம் கூடுகளைத் தாக்க முடியாமல் மெல்லிய கிளைகளில் கூடுகளைக் கட்டுகின்றன. மேலும் மற்ற கொடிய பறவைகளின் கண்களில் படாமல் இலைகளின் மறைவில் கூடுகளைக் கட்டுகின்றன.

## நிறம் மாறும் பாறை!

ஆஸ்திரேலியாவிலுள்ள 'ஏயர்ஸ்ராக்' என்ற பாறை சூரியோதயத்திலிருந்து சூரியன் மறையும் வரை பல நிறங்களில் மாறிக் கொண்டே இருக்கிறது. சூரியன் உள்ள நிலையும் கோணத்தையும் பொறுத்து இந்த நிறமாற்றங்கள் ஏற்படுகின்றன. இது 1200 அடி உயரத்தில் கம்பீரமாக நிற்கிறது. இதன் அடிச் சுற்றளவு ஐந்து மைல். அடிப்பகுதி சிவப்பாக இருக்கிறது. சூரியோதயமாகும் போது செம்பு நிறமாயும் சூரியன் மறையும் போது ஊதா நிறமாயும் மாறுகிறது. இந்த இடைக் காலத்தில் மஞ்சள், ஆரஞ்சு ஆகிய நிறங்களை அடைகிறது. 120 வருடங்களுக்கு முன் கண்டுபிடிக்கப்பட்ட இப் பாறைக்கு அந்நாளையப் பிரதமர் சர். ஹென்றி ஏயர்ஸின் பெயர் சூட்டப்பட்டது.



Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!



# போட்டோ வாக்கியப் போட்டி : : பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1994 டிசம்பர் மாத இதழில் வெளியிடப்படும்**



S.B. PRASAD



K. MADHU

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும் ★ அக்டோபர் 10-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை - 600 026**

---

## ஆகஸ்ட் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **ஆன்மீகத்திற்கு முதல் படி**
இரண்டாவது போட்டோ : **ஆரோக்கியத்திற்கு முதல் அடி**
பரிசு பெற்றவர் : **ஆ. அகிலாஸ்ரீ, ஈரோடு-9.**




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றார், உறவினர்களுக்கு நீங்கள்
அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா



அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள்
அளியுங்கள்

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம்,
மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ், அல்லது தெலுங்கு

தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும்
உணரச் செய்யும்

**சந்தாத் தொகை (ஆண்டிற்கு)**

**ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 105.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 252.00

**பிரான்ஸ் சிங்கப்பூர், யு.கே, யு.எஸ்.ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள
நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 111.00 விமானத்தபால் வாயிலாக ரூ. 252.00

பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சநதமாமாமா பப்ளிகேஷன்ஸ்
என எழுதி
சர்குலேஷன் மானேஜர், சந்தமாமா பப்ளிகேஷன்ஸ், சந்தமாமா பில்டிங்க்ஸ்,
வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்